பூவிதழ் புதுமைபோல் ஜெய் தரும் வனப்பு
மலர்ந்த மல்லிகை என மங்கைக்கு பூரிப்பு!






வனப்பின் வசந்தம் வீசுவது ஜெய்

மல்லிகை மணம் கமழும் அழகுசாதன சோப்

டாடா தயாரிப்பு

OBM 2067 TM

வாழ்க்கையில் அதிர்ஷ்டமுள்ள ஆடவர் ஒருவரை மீண்டும் சந்திக்கும்போது...

...அவர் அணிந்துள்ள ஆடைகளின் அழகையும் பாருங்கள்!



# சேமிப்பதற்கு யூகோ பாங்க்
# அருகாமையில் உள்ள
# வசதியான பாங்க்

நீங்கள் எங்கு இருந்தாலும் அங்கே உங்களருகில் ஒரு வசதியான யூகோ பாங்க் உள்ளது. சேமிப்பை எளிதாக்குவதற்காகவே. உங்களை வரவேற்கவும், உங்கள் சேமிப்பை வளரச் செய்யவும் நாடு முழுவதும் எங்கள் கிளைகள் பரந்து இருக்கின்றன.

விவரங்களுக்கு உங்கள் அருகில்
உள்ள யூகோ பாங்க் கிளையை
அணுகவும்




## யூனைடெட் கமர்ஷியல் பாங்க்

UCOC.50A TAM



# கல்கி

ராக்ஷஸ
மார்கழி 6

○

டிசம்பர் 21
1975

○

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## கண்டுபிடியுங்களேன்!

○ இங்குள்ள வட்டங்களில் எல்லாமே ஒன்றுபோலத் தோன்றினாலும் ஒன்று மட்டும் மற்றவைகளிலிருந்து மாறுபட்டிருக்கிறது. அது எது? (ர. ரமேஷ்)


1


2


3


4


5


6



○ அந்தப் பூனைக்கு இந்த எலியைப் பிடிக்க ஆசை. எலியோ பூனையின் பிடியில் சிக்காமல் தப்பிவிட்டது. அது எந்த வழியாகத் தப்பித் தன் வளைக்குப் போனதென்று தெரியுமா உங்களுக்கு?

---

## ஒவ்வொரு நாளும் உங்கள் சருமம் சிறிது ஈரப்பசை-யையும், சிறிது இளமையையும் இழக்கின்றது.



## புதிய ஜான்ஸன்ஸ்* பேபிலோஷன் ஒவ்வொரு நாளும் ஏற்படுகின்ற அந்த இழப்பை ஈடுசெய்கின்றது.

ஒரு பெண்மணியின் விலையில்லாப் பொக்கிஷம் அவளது சருமம். எனினும், வயதாக ஆக, அதை அழகாகவே வைப்பது கடினமாகும். வருங்காலத்தில் உங்கள் சருமத்தை அழகாக வைக்கவேண்டுமானல், அதை இன்று முதலே நன்று பராமரிக்கவேண்டும். ஆகையால்தான் உங்களுக்குத் தேவை புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன். இந்த விசேஷ அழகு லோஷன் சருமத்திற்கு இன்றியமையாத ஈரப் பசையை நிலை நிறுத்துகிறது.

அதோடு, கடுமையான குளிர் மாதங்களில் உங்கள் சருமத்தை மிருதுவாகவும், இளமையுடனும், அழகொளி வீசும்படியும் வைக்கிறது—ஆண்டு முழுவதும் கூட. எனவே, ஒவ்வொரு காலையிலும் இரவிலும் புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன் உபயோகியுங்கள். உங்கள் முகம், கழுத்து மற்றும் கைகளில் உபயோகித்து, உங்கள் சருமத்திற்குப் பனிபோன்ற புதுமையை அளித்திடுங்கள்.




## புதிய ஜான்ஸன்ஸ் பேபிலோஷன்

### உங்கள் சருமத்தை மிருதுவாக, இளமை தவழ, அழகொளி வீச வைக்கின்றது.

கல்கி

மலர் 35

இதழ் 21



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -- பாரதியார்

# பத்திரிகைத் தர்மம் தழைக்கட்டும்!

புதிதாக அறிவிக்கப்பட்டுள்ள அவசரச் சட்டத்தினால் பத்திரிகைச் சுதந்திரத்துக்குச் சில கட்டுப்பாடுகள் வந்திருப்பதாகக் கருதலாமே யொழிய பத்திரிகை தர்மத்துக்கு ஆபத்து வந்து விட்டதாக நினைப்பதற்கில்லை.

என்ன எழுதக் கூடாது என்று விளக்குகிற சட்டம் எவற்றை எழுதலாம் என்றும் கூறுகிறது. அரசாங்கம் இயற்றும் சட்டங்களை, அரசாங்கத்தின் கொள்கைகளை, நிர்வாகக் காரியங்களை, விமர்சிக்கலாம். தவறுகளையோ அநீதிகளையோ சுட்டிக் காட்டலாம். நியாயம் கோரிப் பெறலாம்.

பத்திரிகை தர்மத்துக்கு விரோதமாக, ஆதாரமற்ற முறையில் தனி நபர்களை இழிவுபடுத்துவது, சட்டபூர்வமாக அமைந்த அரசாங்கத்தின் மீது மக்களுக்கு வெறுப்பை வளர்த்து வன்முறைகளில் ஈடுபடச் செய்வது, ஜாதி, மத, இன, மொழி பிரதேச அடிப்படையில் துவேஷத்தை வளர்ப்பது, ஆபாசமாக எழுதிப் படம் போடுவது போன்ற காரியங்களுக்குத்தான் இன்று கட்டுப்பாடு வந்துள்ளது.

பத்திரிகைச் சுதந்திரம் பரிபூரணமாக வேண்டும் என்று அறிவாளிகள் பலரே கூறும் போது அதற்கு அவர்கள் தரும் காரணம், பத்திரிகைச் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்த அரசாங்கத்துக்குச் சிறிதளவு அனுமதி வழங்கினாலும் அந்த அதிகாரம் துஷ்பிரயோகம் செய்யப்படலாம் என்பதுதான். அத்தகைய அதிகார துஷ்பிரயோகம் நடப்பதை இன்றே நீதிமன்றத் தீர்ப்புகள் சில நிரூபிக்கின்றன. ஆனால் இவை இனி அபூர்வமாகவே நிகழும் என்றும் பொதுவாக அதிகாரிகளும் பத்திரிகைகளும் பொறுப்புணர்ந்து நடந்து கொண்டு சகஜ நிலையை வளர்ப்பார்கள் என்றும் எதிர்பார்ப்போம்.

அத்தகைய சகஜ பாவம் வளர இரு தரப்பிலும் இருக்க வேண்டியது சகிப்புத் தன்மை. இதை விளக்குகிறது காந்திஜியின் வாழ்வில் ஒரு சம்பவம்.

லண்டனில் காந்திஜிக்கு நடந்த வரவேற்பு வைபவம் ஒன்றில் பேச முன்வந்த லேடி ஆஸ்டர் எடுத்த எடுப்பிலேயே காந்திஜியை —வரவேற்பு வைபவத்தின் நாயகரை — ''ஹம்பக்'' என்று வர்ணித்தார். தொடர்ந்து, 'காந்திஜி சகலத்தையும் குட்டிச் சுவராக்குகிறார்' என்றெல்லாம் குற்றச்சாட்டுக்களை அடுக்கினார். அண்ணல் அமைதியாக அனைத்தையும் செவி மடுத்தார். இறுதியில் ''என்னைச் சற்றுப் பேச அனுமதிப்பீர்களா?'' என்று கேட்டுக் கொண்டார். யாரும் குறுக்கிடக் கூடாது என்பதற்காக இப்படி அனுமதி பெற்ற பிறகு தமது கொள்கைகளையும் திட்டங்களையும் விவரித்தார். அந்தச் சொற்பொழிவின் இறுதியில் லேடி ஆஸ்டர் மகாத்மாவிடம் தாமாகவே முன்வந்து மன்னிப்புக் கோரினார்!

அண்ணலிடம் காணப்பட்ட அந்தச் சகிப்புத் தன்மை நம் ஒவ்வொருவரிடமும் — ஆள்பவரிடமும் ஆளப்படுபவரிடமும் வளர்ந்தால்தான் இங்கு ஜனநாயகம் செழிக்க முடியும்.

அறிஞர் ஸாமுவல் ஜான்ஸன் சொன்னார்: அரசாங்க அதிகாரிகள் முன்கூட்டியே அங்கீகரித்த விஷயங்களை அல்லாது வேறு எதையுமே பிரசுரிக்கக் கூடாது என்ற நிலை உருவாகுமேயானால் அதிகார பலம் ஒன்றே உண்மையின் அளவுகோலாகி விடும்!

நல்ல வேளை இந்தப் பரிதாப நிலைக்குப் பாரத நாட்டில் உள்ள பத்திரிகைகள் ஆளாகி விடவில்லை. பத்திரிகை தர்மத்தைக் கடைப்பிடிக்கும் வரை இங்கு தைரியமாக எதையும் எழுதலாம்.

# பிரதமரின் பார்வைக்கு

அரசியல் சாசனம் அப்படியொன்றும் தொடக் கூடாத அளவில் புனிதத் தன்மை வாய்ந்ததல்ல; காலத்துக்கு ஏற்ப அவசியமான மாறுதல்களை அதில் செய்து கொள்ள வேண்டியது

தான் என்று நமது பிரதமர் திருமதி இந்திரா காந்தி ஜெஃபர்ஸனை மேற்கோள் காட்டியிருக்கிறார். ''ஒவ்வொரு தலைமுறையும் தங்கமது வாழ்க்கையில் மகிழ்ச்சியை அதிகரிக்கக்கூடிய அரசாங்க அமைப்பை உருவாக்கிக் கொள்ள உரிமை பெற்றிருக்க வேண்டும். இதைச் செய்ய ஒரு வாய்ப்பை இருபது ஆண்டுகளுக்கு ஒருமுறை அரசியல் சாசனம் வழங்க வேண்டும்'' என்று அமெரிக்க அறிஞர் ஜெஃபர்ஸன் கூறியிருப்பதைப் பிரதமர் எடுத்துக் காட்டியுள்ளார்.

நல்லது. பிரதமர் ஜெஃபர்ஸனை மேற்கோள் காட்டியுள்ளதால் நாமும் ஜெஃபர்ஸன் கூறியுள்ள வேறு இரு விஷயங்களைப் பிரதமரின் பார்வைக்குச் சமர்ப்பிக்கிறோம்.

ஒன்று:

''சிக்கனத்தையே நான் எல்லாக் குண நலன்களிலும் முக்கியமானதாகக் கருதுகிறேன். அரசாங்கம் கடன்படுவதை மற்ற எல்லா அபாயங்களையும் விட அச்சத்துக்குரிய பேரபாயமாக எண்ணுகிறேன். நமது சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டுமானால் நமது தலைவர்கள் நம் தலை மீது ஏராளமாகக் கடனைச் சுமத்தி விட அனுமதிக்கலாகாது. இப்படி நாம் கடனாளியாகி விட்டோமானால் நமது உணவிலும் பானத்திலும், நமது அவசியத் தேவைகளிலும் வசதிகளிலும், உழைப்பிலும் கேளிக்கைகளிலும் வரிகள் உயரும்.''

மற்றொன்று:

''விவசாயம், தொழில் உற்பத்தி, வர்த்தகம், கடல் வாணிபம் ஆகியன சுபிட்சத்தின் நான்கு தூண்கள். இவை மிக அதிகமாகச் செழிப்படைவது தனி மனிதனின் சுதந்திர முயற்சிக்கு விடப்படும் போதுதான்.''

# இசைவேள்வி

ஒரு சங்கீத சபை வெற்றிகரமாக நடக்கிறதென்றால் பல பேர்களுடைய ஒத்துழைப்பு கிடைத்திருப்பதாக அர்த்தம். சங்கீதக் கலைஞர்கள், ரசிகர்களான சபா அங்கத்தினர்கள், கலைகளை வளர்க்கும் ஆர்வமுடைய செல்வந்தர்கள் என்று பலரது ஒட்டுமொத்தமான முயற்சியே வெற்றிக்கு அடிப்படை. இவையெல்லாமும் போதாது. தனித் தனியே இருக்கும் இவர்களிடையே இணைப்புப் பாலமாக விளங்கும் செயலாளரும் வேண்டும். அப்படி செயலாளராய் விளங்குகிறவர் அக் காரியத்தை ஒரு யக்ஞம் போல் பாவித்து விடாமுயற்சியும் பக்தி சிரத்தையும் கொண்டு நடத்த வேண்டும்.



திரு யக்ஞராமன்

தி. நகர் கிருஷ்ண கான சபைக் காரியதரிசியின் பெயரே யக்ஞராமன். அந்தச் சபையின் சிறப்பையே வாழ்வின் லட்சியமாகக் கொண்டு இசைவேள்வி நடத்துபவர். அரும்பாயிருக்கும் கலைஞர்களை மலரச் செய்தவர். மலர்களை மணம் வீசச் செய்தவர்.

எனவே சங்கீத வித்வான்கள் பலரும் சேர்ந்து அவருக்கு ஒரு பாராட்டு விழா 21-12-75 அன்று காலை 9.30 மணிக்கு மயிலை வேதாந்த தேசிகர் கல்யாண மண்டபத்தில் நடத்துகிறார்கள்.

யக்ஞராமன் அவர்களை நாம் வாழ்த்தும் போதே கிருஷ்ணகான சபையின் தலைவரும் தொழில் வர்த்தகத் துறை பிரபலஸ்தருமான திரு வி. டி. சுவாமி அவர்கள் நம் முதல் வாழ்த்தைக் குறைவின்றிப் பெறுகிறார். காரியதரிசிக்கு யோசனைகள் கூறியும் சபைக்குப் பொருளுதவி செய்தும் வேறு பல விதங்களிலும் பக்கபலமாக இருக்கும் திரு. வி.டி. சுவாமி கிருஷ்ண கான சபையின் வெற்றிக்கு உதவியவர்களுள் முக்கியமானவர்.

கிருஷ்ண கானம் தொடரட்டும்.

ராஜாஜி சிந்தனை

## கடவுளின் கண்ணீர்

ஹிந்து சமயத்தின் சாரம் என்று எதை நான் அறிந்திருக்கிறேனோ அதை உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். காரணமுள்ள இடத்திலெல்லாம் காரியம் இருக்கவே செய்யும். தண்ணீருக்குள் கல்லைப் போட்டால் தண்ணீரில் ஒரு சிறு அலை உண்டாகும். அந்த அலை மற்றோர் அலையை உண்டாக்கும். இப்படியே அலைகள் பல உண்டாகும். கடவுள் கூட இதனைத் தடுக்க முடியாது எனலாம். இரண்டோடு இரண்டைச் சேர்த்தால் நாலாகும். அதைக் கடவுள் மாற்றி அமைக்க முடியுமா? இந்த விஷயத்தை உணர்ந்து கொண்டால்தான் ஹிந்து சமயத்தின் சாரம் என்று நான் கருதுவதை நீங்கள் அறிந்து கொள்ள முடியும்.

நம்முடைய மனத்தில் தோன்றும் ஒவ்வொரு கெட்ட எண்ணமும் கடவுளாகிய நீரில் தோன்றும் துன்பகரமான அலையாகும். அதைக் கடவுள் இதயத்தைப் பிளக்கும் குத்து என்றுகூடக் கூறலாம். அதனால்தான் சில ஞானிகள் நாம் கெட்ட எண்ணங்களை எண்ணும் போது கடவுள் கண்ணீர் விடுவதாகக் கூறுகிறார்கள். அமெரிக்காவில் பேசுவது இங்கு கேட்கிறது. அது எப்படி என்பது நமது கண்களுக்குப் புலப்படுகிறதில்லை. அதேபோல் கெட்ட எண்ணங்களும் கண்ணுக்குப் புலனாகா விட்டாலும் கடவுளைப் போய்ப் பாதிக்கின்றன எனலாம். —சமயம் என்ற கட்டுரையில்


என்னங்க பத்திரிகைக்கு ஒண்ணும் எழுதாமல் சும்மா உக்காந்திருக்கீங்க?
இப்ப ராகு காலம் இப்ப எழுதினா ஏதாவது வம்பு வரப்போறது!


'தேர்'தல்
நகருமா?



## அருள்மிகு மீனாட்சி சுந்தரேசுவரர் திருக்கோயில், மதுரை

# கோடி அர்ச்சனை

நாடு வளம்பெற, மக்கள் நல்வாழ்வு பெற்று மகிழ, அறம் தழைக்க, நல்லாட்சி நிலைபெற, எல்லா உயிர்களும் இன்புற்று வாழ அருள்மிகு மீனாட்சி அம்மனுக்கு கோடி அர்ச்சனை, வரும் 7-12-1975-ம் தேதி முதல் நடைபெறுகிறது. அன்பர்கள் அனைவரும் இக் கோடி அர்ச்சனையில் பங்கு கொண்டு அன்னையின் திருஅருள் நோக்கும், புனித பிரசாதமும் பெற வேண்டுகிறோம்.

**சகஸ்ரநாமம் அர்ச்சனை டிக்கட் 1க்கு ரூ. 15.00**
**லட்சார்ச்சனை செய்ய ... ரூ. 1,500.00**

திரு என். பொன்னப்பன் அவர்கள்
தலைவர், அறங்காவலர் குழு

திரு டி. தியாகையா அவர்கள்
திரு ஆர். கோபால்சாமி அவர்கள்
திரு கே. எஸ். இராமகிருஷ்ணன், எம். எல். ஏ., அவர்கள்
திரு எம். பி என். பொன்னுச்சாமி அவர்கள்
அறங்காவலர்கள்

ஆர். திருவேங்கடசுவாமி,
உதவி ஆணையர்/நிர்வாக அதிகாரி

# புராண கைங்கரியம்




ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசாரிய ஸ்வாமிகள்

ஏகாதசியன்று உபவாசம் இருக்க வேண்டும். வயிற்றுக்கும் ஒரு நாளாவது 'லீவ்' வேண்டும் அல்லவா? மெஷின்கள் கூட விடாமல் வேலை செய்தால் கெட்டுப் போய்விடுகின்றன என்று அப்போதப்போது ரெஸ்ட் கொடுக்கிறார்கள். இப்படி மாசத்தில் இரண்டு நாள் வயிற்றுக்கு ரெஸ்ட் கொடுத்தால் ஆரோக்கியத்துக்கே அது ரொம்ப நல்லது. முதலில் கஷ்டமாகத்தான் இருக்கும். ஆனால் அப்பியாசத்தினால் எந்தக் கஷ்டத்தையும் சமாளித்துவிடலாம். சரீர ரீதியில் இந்தப் பட்டினி செய்கிற நன்மையோடு ஆத்மிகமாகவும் அதற்குப் பலனுண்டு. இதற்காகத்தான் விசேஷமாக பகவத் ஸ்மரணம் இருக்க வேண்டிய தினங்களில் பூர்ண உபவாசம், 'ஒரு போது' என்றெல்லாம் வைத்திருக்கிறது. காந்தி கூட பட்டினி கிடந்தாலே தமக்கு ஓர் ஆத்ம சக்தி கிடைக்கிறது என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

ரொம்பவும் பசி பொறுக்க முடியாவிட்டால் பழம் வேண்டுமானால் சாப்பிடலாம். பழத்தை ஆகாரமாகக் கொள்வதுதான் 'பலகாரம்.' பல தினுசான ஆகாரங்களை — சாதத்தை விட ஜாஸ்தி புஷ்டியுள்ள இட்டிலி தோசை தினுசுகளை — சாப்பிடுவது அல்ல.

ஏகாதசியன்று என்ன செய்யக் கூடாது என்று 'நெகடிவா'கச் சொன்னேன். அன்றைக்கு என்ன செய்ய வேண்டும் என்று 'பாஸிடிவா'கவும் சொல்ல வேண்டும். ஈச்வரத் தியானம், ஆலய வழிபாடு, பஜனை, சத்சங்கம் எல்லாம் அன்றைக்கு நிறைய வைத்துக் கொள்ள வேண்டும். ஒரு பேட்டை வாசிகள், கிராம வாசிகள் எல்லோரும் கோயில் அல்லது பஜனை மடம் மாதிரிப் பொது இடத்தில் சேர்ந்து அரை மணியாவது புராண சிரவணம் செய்ய வேண்டும்.

நிஜமே இப்பொழுதெல்லாம் பட்டணங்களில் நிறைய உபந்நியாசங்கள் நடக்கின்றன. நியூஸ் பேப்பரில் 'எங்கேஜ்மெண்ட் கால'த்தைப் பார்த்தால் எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது. நான்கூடக் கேள்விப்படாத மத விஷயங்கள், கதை, புராணங்களில் உபந்நியாசங்கள் நடக்கின்றன. ஜனங்களும் கூட்டம் கூட்டமாக இவற்றுக்குப் போகிறார்கள். ரொம்பவும் நாகரிகமான வழியில் இருக்கப்பட்டவர்கள், படித்த யுவர்கள் யுவதிகள் கூட இவற்றுக்கு வருகிறார்கள். நடுவாந்தரத்தில் இருந்ததோடு பார்க்கும்போது இதை ஒரு 'ரீனைஸான்ஸ்' (மறுமலர்ச்சி) என்று கூடச் சொல்லத் தோன்றுகிறது.

ஆனால் இதிலே முக்கியமாகக் கவனிக்க வேண்டியது, பௌராணிகர்கள் எந்த அளவுக்கு ரஸாபாஸம் உண்டாகாமல் கதை சொல்கிறார்கள் என்பதுதான். ஏதோ கொஞ்சம் பாலிடிக்ஸ், ஹாஸ்யம், உபகதைகள் வந்தால் பரவாயில்லைதான். ஆனால் இதுகளே கதையை, அதன் தத்துவார்த்தத்தை அடித்துக் கொண்டு போகிற மாதிரி செய்து விட்டால் அது ரஸாபாஸம். பகவான் நினைவை உண்டாக்குவதுதான் ரஸம். அதையும் அந்தப் புராணத்தில் சொல்லியிருக்கிற பிரகாரம், அதை விட்டு ரொம்பவும் வெளியே ஓடிவிடாமல், மனசில் பதிகிற மாதிரி சொல்ல வேண்டும். இதற்கு முக்கியமாக ஸ்வாநுபூதி இருக்க வேண்டும். கதை சொல்கிறவருக்கே ஆஸ்திக்யம், ஆசாரங்கள், தெய்வ பக்தி, தாம் சொல்கிறதில் மனமார்ந்த நம்பிக்கை எல்லாம் இருக்க வேண்டும். அவரே விஷயத்தில் (ஸப்ஜெக்டில்) தோய்ந்தவராக இருந்து விட்டால், வேண்டாத கதைகள், பாலிடிக்ஸில் போவதற்கு அவருக்கே மனசு வராது. ஸினிமா, நாவலுக்குப் பதில் அதே மாதிரி இன்னொரு பொழுதுபோக்கைப் போலப் புராணப் பிரவசனமும் ஆகிவிட்டால் அதில் ஒரு பிரயோஜனமும் இல்லை.

பட்டணங்களில் உள்ளது போல் சின்ன ஊர்களிலும், கிராமங்களிலும் இவ்வளவு உபந்நியாசங்கள், பஜனைகள், ஆஸ்திக சங்கங்களைப் பார்க்க முடியவில்லை என்று கூடச் சொல்லலாம். ரொம்பவும் நாகரிகம் முற்றிய இடத்திலேயே நியூடன் விதி (Law)ப்படி அதற்கு மாற்றாக, இம்மாதிரி ஸத்விஷயங்களும் வளர்ந்து வருகின்றன. எல்லா இடத்திலும்—கிராமங்களிலும் கூட இப்படி நடக்க வேண்டும். எந்த இடமானாலும் ஏகாதசியன்று பக்திக்காகவும் தர்மத்துக்காகவும் என்றே புராண படனமும் (படித்தலும்) சிரவணமும் (கேட்பதும்) நடக்க வேண்டும்.

செவிக்கு உணவு இல்லாதபோது வயிற்றுக்கும் ஈவதைப் பற்றித் திருவள்ளுவர் சொல்லியிருக்கிறார். ஏகாதசியில் வயிற்றுக்கு ஒன்றும் கிடையாது. செவிக்குத்தான் உணவு. —சாட்சாத் பகவானின், பாகவதர்களின் புண்ணிய சரித்திரங்களை அன்று சிரவணம் செய்ய வேண்டியதை ஒரு கடமை (Duty)யாகப் பண்ணிக் கொள்ள வேண்டும். சிரவணம் — மனனம் — நிதித்யாஸனம் என்று மூன்று படிகள். சிரவணம் செய்தது இந்தக் காதில் பட்டு இன்னொன்றின் வழியாகப் போய்விடக் கூடாது. அதை மனசில் இறக்கிக்கொண்டு அங்கே உருட்டிக் கொண்டே இருக்க வேண்டும். அதுதான் மனனம். அப்புறம் இது அநுபவமாகி வாழ்க்கையிலேயே ஊறிவிடுவதற்குப் பெயரே நிதித்யாஸனம். புராணக் கதையாகச் சிரவணம் செய்ததில் உள்ள சாரத்தை அப்புறமும் அசை போடுகிற மாதிரி மனனம் செய்து, கொஞ்சம் கொஞ்சமாவது அதிலேயே ஊறி நின்று அதைச் சொந்த அநுபவமாக்கிக் கொள்ள வேண்டும். (தொடரும்)

[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள் ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது.]

இவ்விதழ் மேலட்டையை அலங்கரிக்கும் திரு எஸ். விசுவநாதன் வாழ்வில் அர்த்தமுள்ள அறுபதாண்டுகளைக் கண்டவர். அவர் எதிர்காலத்தையே நினைப்பவர் என்றாலும் நாம் அவரது கடந்த கால வாழ்வைச் சற்றே திரும்பிப் பார்த்துப் பயன் பெறலாம்.

— ஆசிரியர்



# ஆற்றலுக்கு அறுபது

சித்ரா எஸ். நாராயணசுவாமி



காகித ஆலை - உட்புறத் தோற்றம்.

கிறிஸ்துமஸ் வாரத்தில் பிறந்தவர்கள் பல்வேறு அளவுகளில் உலகைச் சீரமைப்பார்கள் என்று சோதிடர்கள் கூறுவதுண்டு. எஸ். விசுவநாதன் தமிழ் நாட்டின் சூழலைப் பல வகையான பெரிய தொழிலகங்களை உருவாக்கியதன் மூலம் மாற்றியமைத்திருக்கிறார். இதை அவர் ஓர் எரிமலைக்கு ஒப்பான சக்தியை வெளிப்படுத்தி, ஊக்கத்தையும் தீர்க்க தரிசனத்தையும் தலைமை ஏற்கும் திறனையும் காண்பித்துச் சாதித்துள்ளார்.

திரு எஸ். விசுவநாதனுக்கு அறுபது வயது பூர்த்தியாகிறது என்று என்னிடம் யாரேனும் வந்து சொல்வதே அபத்தமாகப் படுகிறது. அவர் தமது அலுவல்களை உறுதியுடன் கவனிப்பதையும் செய்து முடிப்பதையும் பார்த்து வரும் நான், அவர் தமது நாற்பதுகளில் தான் இன்னமும் இருக்கிறார் என்று நம்பி வந்தேன். சத்தியத்தை நாடும் அவரது வாதத் திறமை கடந்த பல ஆண்டுகளில் சிறிதும் குறைவுபடவில்லை என்பது மேலும் திகைக்க வைக்கும் விஷயம்.

அவர் 1915ம் ஆண்டு டிசம்பர் 21ந் தேதி பிறந்தார் என்பதை இன்று அறிந்தேன்.



திரு
என். கோபாலசாமி
அய்யங்கார்

வழக்கறிஞராக அவர் விளங்கிய காலத்தில் சிலந்தி வலை பின்னுவது போல், நிகரற்ற வாதங்களைப் பிரயோகித்து எதிர்த்தரப்பு வழக்கறிஞரை அதில் சிக்க வைத்து விடுவார் என்று நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். சென்ற தலைமுறையைச் சேர்ந்த ஐரோப்பிய நீதிபதிகள் பலர் இவரது வாதத் திறமையையும் சட்ட உண்மைகளைத் தெளிவாகவும் ஆழமாகவும் எடுத்துரைக்கும் ஆற்றலையும் கண்டு சொக்கிப் போயிருக்கிறார்கள்.

சமூக நீதியில் அவருக்கு இருந்து வந்த ஆழ்ந்த உணர்வு அவரைத் தொழிற் சங்க இயக்கத்தில் ஈர்த்தது. தொழிற் சங்கத் தலைவராகவும் வழக்கறிஞராகவும் விளங்கிப் பல தொழிலதிபர்களின் கோபத்துக்கு ஆளானார். அவருக்குப் பெரும் புகழ் ஈட்டித் தந்த ஒரு வழக்கு எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. தென் இந்தியத் தோட்டத் தொழிலாளருக்கு ஊதிய உயர்வு கோரிய வழக்கு. தென் இந்தியத் தோட்ட முதலாளிகள் சங்கம் (UPASI) இவருக்கு எதிராக வழக்காடியது. தனக்கிருக்கும் செல்வம், செல்வாக்கினைப் பிரயோகித்து இந்தியாவின் மிகச் சிறந்த வழக்கறிஞர்களை அமர்த்திக் கொண்டது. எட்டு மாதங்கள் குன்னூரில் வழக்கு நடந்தது. விசாரணையின் முடிவு எஸ். வி.க்கு முழு வெற்றியாக அமைந்தது மட்டுமல்ல: அவருக்கு ஓரளவு குழப்பத்தையும் தர்ம சங்கடத்தையும் கூட விளைவித்தது! ஏனென்றால், ந்திரனைக் கேட்டால்தான் சில எரி நட்சத்

திரங்களாவது கிடைக்கும்' என்று வழக்கமாகத் தொழிற் சங்கத் தலைவர்கள் எண்ணுவது போல் எஸ். வி.யும் கருதிச் சந்திரனையே கேட்டிருந்தார். நீதிபதி அவருக்குச் சந்திரனையே வழங்கியும் விட்டார்! ஆனால் தொழிற்சங்கத்துக்கோ அல்லது தோட்ட முதலாளிகளுக்கோ அது எட்டக் கூடிய உயரத்தில் இல்லை!



சேஷசாயி காகித ஆலையில் மூங்கிலை வெட்டிக் கூழ் செய்யுமிடம்.

வழக்கறிஞராகவே தொடர்ந்திருந்தால் எஸ். வி. இன்றுள்ளதைவிட செல்வமும் செல்வாக்கும் பெற்றிருப்பார். ஆனால் காலஞ்சென்ற சேஷசாயி அவரைத் தொழில்துறைத் தலைமை ஏற்கப் பணித்தார். எஸ். வி. இந்தத் திருப்பத்தை மகிழ்ச்சியுடன் ஏற்றார்.

தொழில்துறைத் தலைவராக அவர் கடின உழைப்பைப் பெறுவதில் மட்டும் தமது திறனைக் காட்டவில்லை; தமது சகாக்கள் தம்மைப் போலவே துரிதமாகச் சிந்தனை செய்து நல்ல முடிவுகளுக்கு வரவேண்டும் என எதிர்பார்த்தார். காரியம் முடிந்தது என்ற பதிலைத்தான் எதிர் பார்ப்பார், தாமதத்துக்கான காரணங்களை அல்ல.

தொழில் துறையில் விசுவநாதனது சாதனைகள், ஈரோடில் சேஷசாயி காகிதம்-அட்டை ஆலை, திருச்சியில் ஸிம்கோ மீட்டர்ஸ் தொழிலகம், வடலூரில் சேஷசாயி தொழிலகம் ஆகியன. இவை ஒவ்வொன்றுமே ஒரு வாழ்நாளின் சாதனையாகக் கருதத் தக்கது. இன்னொருவராயிருந்தால் இவற்றுள் ஒரு சாதனையைக் கொண்டே திருப்தி அடைந்திருப்பார். ஆனால் எஸ். வி. மேன் மேலும் புதிய சாதனைகளைப் புரியவே விழைவார்.

விசுவநாதனுடைய வெற்றியின் அடிப்படை ரகசியம் சில அரிய குண நலன்களின் அபூர்வ சேர்க்கைதான். அவை: தேச பக்தி, தன்னலமின்மை, தெளிவான சிந்தனை, காலம் குறைவு-செய்ய வேண்டிய பணிகள் ஏராளம் என்ற விழிப்புணர்வு.

அயல் நாட்டவரின் ஒத்துழைப்புடன் தொடங்கப்படும் தொழிலகங்களின் ஆரம்ப கட்டப் பேச்சு வார்த்தைகளில் எஸ். வி. காண்பிக்கும் வாதத் திறமை அபாரமானது. அவர் வெல்லப் போகிறார் என்பது எடுத்த எடுப்பிலேயே நமக்குத் தெரிந்து விடும். ஆனால் அந்த வெற்றியை அவர், எதிரே உள்ளவரை மடக்கி விசனிக்கச் செய்வதன் மூலம் பெறுவதில்லை. பேச்சு வார்த்தையின் முடிவில் விசுவநாதனுக்கு எதிர்த்தரப்பில் அமர்ந்திருப்போர் பல விஷயங்களில் விட்டுக் கொடுத்திருப்பார்கள். அதே சமயம் ரொம்ப மகிழ்ச்சியும் அடைந்திருப்பார்கள்! இவ்வித பேரம் பேசும் ஆற்றலால் இந்தியாவுக்கு ஏராளமான அரிய அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியிருக்கிறார் எஸ். வி.

இவர் மேற்கொள்ளும் மிகக் கடினமான பொறுப்புக்களில் இவருக்கு மனைவி சாரதாவின் துணையும் உதவியும் எப்போதும் உண்டு. கணவனைப் பரிவுடன் புரிந்து கொண்டு, குதூகல சுபாவம், எழிலார்ந்த இயல்பு ஆகியவற்றுடன் பக்கபலமாக நிற்பார். டாக்டர்களின் யோசனையைக் கூடப் புறக்கணித்துவிட்டு எஸ். வி. தம்மை அளவுக்கு அதிகமாக அலட்டிக் கொள்ள முற்படும் போது பாதுகாப்பாக இருப்பார், சாரதா. கணவனுக்கு எது நல்லது என்று உணர்ந்து தோழமையுடன் உதவி வரும் சாரதா பாராட்டுக்குரியவர்.

விசுவநாதன் 1938ல் வழக்கறிஞராகப் பட்டம் பெற்று 1939ல் சென்னை உயர்நீதி மன்ற வக்கீலானார். எடுத்த எடுப்பிலேயே அவர் பல வெற்றிகளைப் பெற்றும்கூட வெறும் காரியவாதியாகிவிட வில்லை. விடுதலைப் போராட்டத்தின் அறைகூவல் அவரை ஈர்த்தது. 1942 ஆகஸ்டுப் போராட்டத்தின் போது குண்டாந்தடிப் பிரயோகத்துக்கு ஆளாகிச் சிறைப்பட்டார். 42 முதல் 44 வரை வடக்கே மிகக் கடுமையாக நடத்தப்பட்ட சிறைச்சாலைகளின் கொடுமைகளுக்கு உள்ளானார்.

ஆனால் விசுவநாதன் யாரேனும் வற்புறுத்தினாலொழிய அந்த நாட்களைப் பற்றிப் பேசுவதில்லை. 1974ல் அரசு அவருக்குத் தாமிரபத்திரம் வழங்கிக் கௌரவித்தது.

1944 முதல் அவர் வழக்கறிஞராகத் தொழில் நடத்தினார். அந்த நாளில் எதிர்த்தரப்பில் இருந்த பெரிய வக்கீல்கள் பலர் வழக்கில் தோற்பது பற்றி வருந்தவில்லை; இப்படித் தொழிலுக்குப் புதிதாக வந்த


நிரு சேஷசாயி

ஒருவனிடம் தோற்கிறோமே என்றுதான் கவலைப்பட்டார்கள்!

காலஞ்சென்ற என். கோபாலசாமி அய்யங்காரும் சேஷசாயியும் இவரது அறிவாற்றலாலும் தொழிலாளர் சமூகத்துக்கு இவர் அளித்து வந்த தலைமையாலும் சர்க்கப் பட்டதில் வியப்பில்லை. தொழில் துறையிலேயே — அதன் விஸ்தரிப்புத் திட்டங்களில்— எஸ். வி.யின் ஆற்றல் பயனுக வேண்டும் என்று அவர்கள் எண்ணினர். அவரை அவ்விருவரும் வற்புறுத்தி வழக்கறிஞர் துறையையும் தொழிற்சங்கத் தலைமையையும் விட்டுவிடச் செய்தது தொழில் துறையின் பேரதிர்ஷ்டம். தொழில்துறைக்கு வந்த பிறகு அவர் முதிர்ந்த தொழிலதிபர்களையே திகைக்க வைக்கக் கூடிய பிரச்னைகளுடன் வெற்றிகரமாகப் போராடி உன்னத நிலைகளுக்கு உயர்ந்துள்ளார்.

தமது அறுபதாவது வயதிலும் ஈரோடில் உள்ள காகித ஆலையின் விஸ்தரிப்புத் திட்டத்தில் ஈடுபட்டு, சிக்கல்களையும் இடையூறுகளையும் வெற்றி காண்பதில் சிந்தனை சக்தியுடனும் அச்சமின்றியும் போராடி வருகிறார்.

அவருக்கும் அவரது மனைவி சாரதாவுக்கும் பல்லாண்டு கூறி இறையருளை வேண்டுவோம்.

# வட்ட மேஜை

இன்று காலை வானொலி தமிழ்ச் செய்தி அறிக்கையில், மந்திரி சபை மாற்றம் பற்றி அறிவிக்கையில், பன்சிலால் **பொறுப்பற்ற** மந்திரியாகப் பதவி ஏற்கிறார் என்றார்கள். Without Portfolio என்பதை இன்னமும் கொஞ்சம் நல்ல முறையில் அறிவித்திருக்கலாம். இலாக்கா இல்லாத மந்திரி என்றால் கூடத் தேவலாம்.

சென்னை — 17
1—12—75 ஸ்ரீதர்

சேரமான் காதலி, ஆரம்பமே களைகட்டி விட்டது. அமரர் கல்கியிடம் கவிஞருக்குள்ள மதிப்பும் அன்பும் மெய்சிலிர்க்க வைத்தன. கல்கி கதைகள் சோடை போகவில்லை என்பதை, அளவில் சிறிதானாலும் சிந்திக்க வைத்த ''ஒரு நாள் வேலை'' போட்டிக் கதை நிரூபித்தது. ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளைப் பற்றிய கட்டுரை பரவசத்தில் ஆழ்த்தியது. உண்மையிலேயே கல்கியைப் படித்தால் ஜோர்தான்.

ஸ்ரீரங்கம்
4—12—75 ஆர். சீனிவாசன்

கவிஞர் கண்ணதாசனின் கடைசிப் பக்கம் இல்லாத கல்கி சந்திரன் இல்லா வானம் போலவும், தாமரை இல்லாத் தடாகம் போலவும் இருக்கிறது.

ஆயினும், முத்துப் போல் அன்னமிட்டு, முப்பழமும் சர்க்கரையும் தித்திக்கும் தேன் அமுதமுமாக எங்களுக்குப்படைக்கத் தொடங்கிய 'சேரமான் காதலி' அதை ஈடுகட்டுகிறது.

கோவை — 13
4—12—75 க. மாரியப்பன்

''சாம்பாரில் உப்பு அதிகமாகிவிட்டால் அந்தக் குழம்பில் ஒரு வெள்ளிக் கரண்டியைப் போட்டுப் பத்து நிமிடம் கொதிக்க வைக்க வேண்டும். உப்பை வெள்ளிக் கரண்டி ஏற்றுக் கொள்ளும்'' என்பதாக ஒரு துணுக்கு வெளியாகி இருந்தது கண்டேன். அடியேன் மருந்துத் துறையும் அதையொட்டிய ரசாயனமும் படித்திருப்பதால் சொல்கிறேன். உப்புச் சுவை நீங்கிவிடும் என்றாலும் இந்த யோசனை நல்லதல்ல. உடலுக்குத் தீமை விளைவிக்கும். அதைவிடச் செய்தவரின் 'கைவண்ணத்தை' எண்ணி ஒருவருக்கும் தெரியாமல் தலையில் அடித்துக் கொண்டு உண்ணலாம் அல்லது வெளியில்கொட்டலாம்.

கோவில்பட்டி
5—12—75 முத்துநாராயணன்

இவ்வாரம் சேலத்தைப் பற்றி வெளியாகிய கட்டுரையில் ஒரு திருத்தம். ஸ்ரீ வாஞ்சிநாதய்யர் ஸ்வர்ணபுரி காலனிக்குத் தலைவர். ஆனால் சேலத்தில் மாபெரும் வழக்கறிஞரும், தர்மிஷ்டருமான ஸ்ரீ ஆர். சுப்பிரமணிய முதலியார் அவர்கள்தான் சுப்பிரமணியபுரம், சுப்பிரமணிய நகர், சுப்பிரமணிய கோயில், பாரதி வித்யாலயா, சாரதா வித்யாலயா, ஸ்ரீ ராமலிங்க வள்ளலார் உயர்நிலைப்பள்ளி இன்னும் பல கோயில்களையும் நிறுவியவர். இன்றும் பெரிய தர்ம ஸ்தாபனம் வைத்துப் பல ஏழை மாணவர்களின் படிப்புக்கு ஆதரவு அளிக்கிறார்.

சேலம் — 7 கே. மீரா

**பாதி ஏமாற்றம்! முழு சந்தோஷம்!**

ஓடினேன் கடைப் பக்கம்
நாடினேன் கல்கி ஒன்றை!
தேடினேன் கடைசிப் பக்கம்!
தேடிய இடந்தனிலே,
சிரிப்பு மேடை ஜம்பமாக
சிரித்ததைச் சொல்லிடவா?
பிரித்துள்ளே பார்க்கையிலே,
பெருங் கவிஞன் பேரோடு,
கேரளத்துத் தென்னையினம்
கீற்றுக் கரம் கூப்பியது!
சேரமான் காதலியாம்
சிரித்தென்னை வரவேற்றான்!
அரக புரிந்து வரும்
அழகு தமிழ்க் கவியரசன்
'சேரமான் காதலி'யை
சிவிகையாய் ஏற்றுவரும்!
சீருள்ள 'அமரர் கல்கி'
திருவிதழை வரவேற்போம்!
சாரமுள்ள 'கல்கி' இதழ்
சாறுதனைப் பருகிடுவோம்
தாரணியில் வானுலகில்
தமிழினை மணக்க வைத்த
பேராசிரியர் திருநாமம்
பெரும் புகழாய் விளங்கிடட்டும்!

சேலம் — 2
7—12—75 மு. ஆனந்தன்

# இணையற்ற எழில்மேனி.
# மென்மை, வழவழப்பு, இயற்கையான வனப்பு.

ஆம்! லக்ஸ் ஸுப்ரீம் உங்கள் மேனி-எழிலுக்கு மெருகூட்டுகிறது. நீங்களே அதை உணர்ந்து மகிழ்வீர்கள். காரணம், லக்ஸ் ஸுப்ரீம் மட்டுமே ப்யூடி க்ரீம் உட்கொண்டதாகும். பெருகும் அதன் செழுமையான நுரையில் உள்ள ப்யூடி க்ரீமின் ஸ்பரிசத்தையும் அதனின்று கமழும் இணையற்ற மெய்மறக்கச் செய்யும் நறுமணத்தையும் நீங்கள் உண்மையாகவே அனுபவிக்கமுடியும். அதன் செழுமையான நுரை உங்களது சருமத்தைத் தழுவிச் சென்று, மேனியைப் பட்டுப்போன்று மிருதுவாக இயற்கை வனப்புடன் வைக்கிறது.




வேறு எந்த சோப்பைப் பற்றிய சிந்தனையும் எழாது.

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமான தயாரிப்பு.

HLLS-8698 A

# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி





## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லாவற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களிலிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகியவற்றுக்கான நுட்பமிகைமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான் முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைந்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ளதோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**

**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மாநுபாக் (வீவிங்) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

# சேரமான் காதலி

கண்ணதாசன்

### முன்கதைச் சுருக்கம்

சேர நாட்டின் தலைநகரமான வஞ்சியில் கி. பி. 754ம் ஆண்டில் இரண்டாம் சேரமான் பெருமாள் அரியணை ஏறி ஆட்சி செலுத்தினார். அவரது ஆட்சிக் காலத்தில் சேர நாட்டின் ஆட்சி முறை சோழ, பாண்டிய நாட்டில் இருந்தது போல் இருக்கவில்லை. சேர நாட்டின் ஒவ்வொரு கிராமமும் ஒவ்வொரு நம்பூதிரியின் கையில் இருந்தது. அனைத்து நம்பூதிரி களுக்கும் சேர்ந்து வஞ்சியிலே ஒரு தலைமையகம் இருந்தது.

இளவரசன் மார்த்தாண்ட வர்மனுக்கு ஆறு வயதாகும்போது மன்னர் சேரமான் பெருமாளின் மனைவி - பட்டத்து ராணி - காலமானார். மன்னர் மறுமணம் செய்து கொள்ளவில்லை. அந்தப்புரத்தில் அவருக்கு வேறு ஆசைநாயகிகளும் இல்லை.

சேரநாட்டில் பல்லவ நாட்டிலிருந்து ஏராளமான வைணவர்கள் குடியேறியிருந்தார்கள். மன்னர் சேரமான் பெருமாளும் வைணவர்தான்.

அரண்மனை வழிபாட்டு மண்டபத்தில், தாம் திருமால் கோவில் கொண்டிருக்கும் திருத்தலங்களை யெல்லாம் தரிசிக்கப் புறப்பட இருக்கும் செய்தியை அறிவித்தார். அரச சபையில் இருந்தவர்கள் அனைவரும் கண்களில் நீர்மல்க நின்றனர்.

அப்பொழுது மன்னரின் மைத்துனரின் மகனான பாஸ்கர ரவிவர்மன் 'ஓ'வென்று அழுதான். அவன் அழுவதைக் கண்டு திகைத்த மன்னர் "பாஸ்கரா, நீயா அழுகிறாய்? இந்தத் தலையாத்திரையில் ஒரு வேளை நான் பட்டத்தைத் துறந்தாலும் என் மகன் மார்த்தாண்ட வர்மன்தான் ஆட்சி பீடத்தை அலங்கரிப்பான்" என்றார்.

பிறகு பாஸ்கர ரவிவர்மன் அரண்மனையை ஒட்டிய தென்னந்தோப்பில் சிறிது நேரம் உலாவிவிட்டு, தலையை முக்காடிட்டு மறைத்துக் கொண்டு பூதர்கள் வாழ்ந்த பகுதியை நோக்கிப் போய் ஓர் அழகிய இல்லத்தை அடைந்தான். அங்கு வாசற் படிக்கட்டில் தங்கச் சிலையென பூழியாறு அமர்ந்திருந்தாள்.

பூழியாறு ஏழைதான் என்றாலும் வனப்பில் ஏழையாயில்லை. அவளைப் பெற்றவள் அவள் ஆறு வயதாக இருக்கும்போதே இறந்துவிட்டாள். பூழியாறுவின் தந்தை வேர்கோவா மகளின் நன்மையைக் கருதி மறுமணம் செய்து கொள்ளவில்லை.

அங்கு வந்து சேர்ந்த பாஸ்கர ரவிவர்மனை பூழியாறு எதிர்நோக்கிக் காத்திருந்தாள். அவன் வந்ததும் வெண்ணிலவு புன்னகை செய்வது போல் அவனை மகிழ்ச்சியோடு வரவேற்றாள்.

ரவிவர்மன் பூழியாறுவைச் சந்தித்ததே ஒரு வி நோ த மா ன சம்பவம். மூன்று ஆண்டுகளுக்கு முன்பு இரண்டாம் ராஜசிம்ம பாண்டியனுக்கும் சேர மன்னனுக்கும் போர் நடந்தது. அப்பொழுது சேரர் படைக்குத் தலைமை வகித்துச் சேனையை நடத்திச் சென்றவன் பாஸ்கர ரவிவர்மன். சேர மன்னனுக்கு வெற்றி கிட்டியதும் ரவிவர்மன் வெற்றி விழாவுக்கு ஏற்பாடு செய்தான்.

ரவிவர்மன் தன் மனைவி பத்மாவதிக்கும், தன் சகோதரிகளுக்கும் நகைகள் வாங்குவதற்காக வாணி



பச் சந்தைக்குப் போனான். அங்குதான் யோகோவா வின் கடையில் அழகி பூஜியானுவைச் சந்தித்தான். அவளது பேரழகு அவனைக் கிறங்க வைத்தது. அந்த ஆணழகனைக் கண்டு அவளும் தன் வசம் இழந்தாள். வெட்கத்தை விட்டு அவனே அவளுக்கு வெற்றி விழாவுக்கு அழைப்பு விடுத்தான். பூஜியானு நிலைகுலைந்துதான் போனாள். மன்னனின் மாளிகையில் நடக்கும் வெற்றி விழாவைக் காணும் அரிய வாய்ப்பு ஓர் ஏழைப் பெண்ணுக்கே தனக்குக் கிடைத்ததை அவளால் நம்பவே முடியவில்லை.

அரச மண்டபத்தில் ரவிவர்மனும் பூஜியானுவும் ஒருவர் உள்ளத்தில் மற்றொருவர் குடிபுகுந்தனர். இளம் உள்ளங்கள் இனம் தெரியாத அன்பு வசப் பட்டன.

பாஸ்கர ரவிவர்மன் பத்மாவதியை விரும்பி மணக்கவில்லை. அது விருப்பம் இல்லாமலே மன்னர் ஆணையின் மேல் நடந்த திருமணம். ஆகவே பாஸ்கரன் அவளை விரும்பவில்லை. அவர்களுள் உடல் உறவுக்கு இடம் இல்லை.

இரவு வேளைகளில் பூஜியானுவைச் சந்திப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தாலும் ரவிவர்மன் அவளைத் தீண்டியதே யில்லை. இரண்டு, மூன்று ஆண்டுகளாக அவர்களது இதய தாபம் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது. பூஜியானு, ''ஒரு நாள் கூட நீங்கள் தூங்கி நான் பார்த்ததில்லை. இன்று வது.....'' என்று சொன்னதும் ரவிவர்மன் உள்ளத் தில் அவளையும் மீறி ஓர் ஆசை துளிர்விட்டது; எழுந்து உள்ளே சென்றான்; கட்டிலில் பூஜியானு விரித் திருந்த அழகுக் கம்பளத்தின் மீது படுத்தான்.

## அத்தியாயம் 3

# ஏக்கமும் தூக்கமும்

ரவிவர்மன் மெதுவாகத் தூங்க ஆரம்பித்தான்.

சொர்ண விக்கிரகம் போன்ற பச் சைக் கிளி ஒன்றைப் பக்கத்தில் வைத் துக் கொண்டு, காம இச்சை இல்லாமல் ஒருவன் நிம்மதியாகத் தூங்க முடியுமா? அதிலும் ரவிவர்மன் வலிமை மிக்க ஆண் மகன். பூஜியானுவோ இரண்டு ஆண்டுகளுக்கு மேலாக அவனைப் பார்த் துப் பார்த்து ஏங்கியவள்.

காதல் உள்ளத்தின் பிரவாகம்தான். புனிதமான காதலுக்கு உடற் சபலம் குறைவுதான். ஆனாலும் தனியாக நெருங்கி இருக்கின்ற இரவிலே அவர்கள் தங்களைச் சந்நியாசிகளாக வைத்திருக்க முடிவதில்லை. உள்ளம் உடலுக்குள் உள் ளதுதான். ஆனால் அதன் கொதிப்பு உடம்பில்தான் சூடேற்றுகிறது. அடுப் பில் எரியும் நெருப்பு அடுப்பை வேக வைப்பதில்லை. பாத்திரத்துக்குள் கிடக் கும் காய்கறியைத்தான் வேக வைக் கிறது. ரத்தம் காய் கறியைவிட மென்மையானது. அதனை அடக்கும் சக்தி ரவிவர்மனுக்கு இந்த வயதில் எப்படி வந்தது ?

'உள்ளம் ஒரு முடிவுக்கு வந்துவிட் டால் உடல் என்ன, உலகமே நம்மை ஒன்றும் செய்ய முடியாது' என்பதை அறிந்தவன் ரவிவர்மன். அதனால் தான் அவன் பல அரசியல் வெற்றி களைப் பெற முடிந்தது.

பாவம் பூஜியானு! அவன் தொட் டாலும் போதும், கட்டி அணைத் தாலும் போதும் என்று, அவனது காலடியிலேயே கண் விழித்துக் காத்துக் கிடந்தாள் அவள். அந்த இரவில் அவள் அர்த்தசாமத்து மணி ஓசையை யும் கேட்டாள்; வைகறை நேரத்து மணி ஓசையையும் கேட்டாள்.

பொழுது விடிந்தது.

அவர்கள் தவறு செய்திருந்தாலும் அந்தப் பொழுது விடியத்தான் போகிறது.

யோகோவா எழுவதற்கு முன்னே ரவிவர்மன் எழுந்துவிட்டான்.

'' இன்றும் நீ தூங்கவில்லையா ?'' வழக்கமான கேள்விதான். அவளும் வழக்கம் போலவே தலை குனிந்தாள்.

ஒரே கேள்வியை ஒவ்வொரு நாளும் கேட்டுக் கொண்டிருக்க அரசியல் வாதிகளால்தான் முடியும். அதற்கு ஒரே பதிலைச் சொல்லக் காதலிகளால் தான் முடியும்.

ரவிவர்மன் புறப்பட்டான்.

அவளது நெற்றியிலாவது ஒரு முத்தமிடக் கூடாதா! அது ஒரு புனிதமான சடங்குதானே! அதற் கும் அவன்



காலத்தை எதிர்பார்த்தவன் போல் காணப்பட்டான்.

பூஜியாளு வழக்கம்போல் நெருப்பிலே நீராடக் கிணற்றடிக்குச் சென்றாள்.

ரவிவர்மன் இல்லம் வந்தடைந்தான்.

அங்கே ஒருத்தி திருமணம் ஆகாமல் கண் விழித்திருக்கக் கண்ட அவன், இங்கே ஒருத்தி அது ஆன கொடுமையால் கண் விழித்திருப்பதைக் கண்டான். அவளிடம் அன்பு காட்டிய அவன், இவளிடம் இரக்கம்கூடக் காட்டவில்லை.

பத்மாவதி அதிகாலையிலேயே நீராடி, சந்தனக் குழம்பை நெற்றியில் தடவி, அதிலே குங்குமமிட்டு, கேரளப் பெண்களுக்கே இயற்கையான கொண்டை போட்டு, அதில் முல்லை மலரைச் சுற்றிவிட்டு அவனை வரவேற்றாள். அவள் ரவிவர்மனுக்கு உறவு முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட மணமகள். அவளைத் தேர்ந்தெடுத்தவரும் இரண்டாம் சேரமான் பெருமான்தான்.



ஏன் அவன் அவளோடு உடல் உறவே கொண்டதில்லை? அதுவும் ஒரு தனிக் கதைதான்.

கொல்லத்தைச் சேர்ந்த ஒரு சேனாதிபதியின் மகள் பத்மாவதி. அந்தச் சேனாதிபதி விழிஞ்ஞத்திலே நடந்த ஒரு போரில் கொல்லப்பட்டார். அப்போது பத்து வயதே ஆகியிருந்த பத்மாவதியை இரண்டாம் சேரமான் எடுத்து வளர்த்து வந்தார். காரணம், அந்தச் சேனாதிபதி ரவி வர்மனின் தந்தைவழிப் பாட்டனுக்கு இரண்டாம் தாரத்து மகளின் கணவன். முறைப்படி பத்மாவதி ரவிவர்மனுக்கு அத்தை மகள்.

ரவிவர்மனுக்குப் பத்மாவதியை மணம் முடிக்க வேண்டும் என்பது, இரண்டாம் சேரமானின் — விருப்பமாக அல்ல, முடிவாகவே இருந்தது. அவனுக்கு வயது வந்த பிறகு சேரமான் தம் விருப்பத்தை ரவிவர்மனிடம் தெரிவித்தார். ரவிவர்மன் அதைக் கடுமையாக மறுத்தான். அந்த மறுப்புக்கு ஒரே காரணம், பத்மாவதியின் தாய், முறைப்படி மணம் முடித்து வந்த ஒருத்திக்குப் பிறந்தவள் அல்ல என்பதே.

''அவள் உத்தமி; அவள் தாய் உத்தமி. அவள் பாட்டியைப் பற்றி உனக்கென்ன கவலை?'' என்பது சேரமானின் வாதம்.

''நான் புஷ்பத்தை மட்டும் பார்ப்பவன் அல்ல; கொடி முளைத்த இடத்தையும் பார்ப்பவன்'' என்பது ரவிவர்மனின் வாதம்.

''பத்மாவதியைத் திருமணம் செய்து கொள்ளவில்லை என்றால், நீ அரண்மனைக்குள் நுழைய வேண்டாம்'' என்றே சேரமான் கூறிவிட்டார்.

ரவிவர்மன் பைத்தியம் பிடித்தவன் போலானான்.

பத்மாவதியையே நேரில் சந்தித்துத் தன்னைத் திருமணம் செய்து கொள்ள அவளுக்கே விருப்பம் இல்லை என்று சேரமானிடம் கூறும்படி கேட்டான்.

''தந்தையின் ஸ்தானத்தில் இருந்து என்னை வளர்த்த அவரிடம் நான் இதை எப்படிச் சொல்வேன்?'' என்று தடுமாறினாள் பத்மாவதி.

''அப்படியென்றால், திருமணம் ஒரு சடங்கு என்ற அளவில்தான்'' என்று சொல்லிவிட்டு வெளியேறினான் ரவிவர்மன்.

ஆசைக்கும் அச்சத்துக்கும் இடையிலே போராடினாள் பத்மாவதி.

தன்னிலும் ஒரு வயது சிறியவனான மார்த்தாண்டவர்மனிடமே நடந்ததையெல்லாம் சொன்னாள்.

''ரவிவர்மனை எனக்குத் தெரியும். அவன் கோபத்தில் ஏதாவது பேசுவான்; ஆனால் குழந்தை உள்ளம். முதல் நாளே எல்லாம் சரியாகிவிடும்'' என்று அவன் பதில் சொல்லிவிட்டான்.

அவ்வளவும் நடந்ததற்குப் பிறகு, சேரமானிடம் ரவிவர்மன் தன் சம்மதத்தை வெளியிட்டது பெரும் ஆச்சரியமாகவே இருந்தது.

''மாமா, எழுமலையான் மணந்த பத்மாவதியைவிட நான் மணக்கப் போகும் பத்மாவதி எல்லா வகையிலும் உயர்ந்தவள். அவளது குண விசேஷங்களைக் கவனியாமல், குலத்தைப் பழித்து விட்டேன். நீங்கள் கால் என்றால், நான் தலை என்று சொல்கின்றவன். திருமணத்துக்குச் சம்மதிக்கிறேன்'' என்றான்.

சேரமான் மகிழ்ச்சிப் பெருக்கில் நீந்தினார். திருமணம் அரண்மனையிலேயே நடந்தது.

அரச பரம்பரையினர் மட்டும் பெரும்பாலும் சாந்தி முகூர்த்தத்துக்கு நம்பூதிரி மண்டபத்துக்குத் தங்கள் மனைவிமாரை அனுப்புவதில்லை.

ரவிவர்மனுக்குத் தாய் தந்தையர் இல்லையாதலால் சேரமானின் அரண்மனையிலேயே முதலிரவு வைபவம் நடந்தது. அந்த இரவில் ஆணழகனான ரவிவர்மனிடம் தான் பெறப் போகும் சுகத்தைப் பற்றிய நினைவே பத்மாவதிக்கு அதிகமாக இருந்தது.

விசாலமான அந்தப் பள்ளி அறையில் சந்தன மரங்களால் அமைக்கப்பட்ட ஓர் இரட்டைக் கட்டில். அதன் மீது மயில் பீலிகளால் செய்யப்பட்ட ஒரு மெத்தை. அதன் மேல் நான்கு மடிப்பாக மடிக்கப்பட்ட ஒரு சீனத்துப் பட்டு. காம்புகள் கிள்ளப்பட்டுத் தூவப்பட்ட மல்லிகை மலர்கள். அரபு நாட்டு வாசனைப் புகை.

அழகுத் திருவதனம் நாணத்தால் சிவக்க, உள்ளமும் உடலும் நெருப்பாய்க் கொதிக்க ஒரு மூலையில் வந்து நின்றாள் பத்மாவதி. கொஞ்சம் கால தாமதமாக வந்து சேர்ந்தான் ரவிவர்மன். அலங்காரம் எதையும் அவனிடம் காணோம். அவளைப் பார்த்தும் பாராதவனாகக் கட்டிலில் சாய்ந்தான்.

கதவு மெதுவாகச் சாத்தப்பட்டது. அவளோ, அவனோ அதைச் சாத்தவில்லை; வெளியிலே இருந்த கன்னியர் சிலர் சாத்தினார்கள். அவர்கள் அங்கிருந்தபடியே மங்கல வாழ்த்துப் பாடினார்கள். ரவிவர்மனின் ஐந்து சகோதரிகளும் வெளியிலே ஐந்து ஆசனங்களில் உட்கார்ந்தபடி யாழ் மீட்டிக் கொண்டிருந்தார்கள்.

# இருமலை முறியடிக்கும் சேம்பியன்

Alembic




**க்ளைகோடின்** அதிக அளவிலே வீட்டு உபயோகத்திற்கான வேறெந்த நிவாரணியையும் விட இருமலை அடித்துவிரட்டியுள்ளது. மூளை, தொண்டை, மார்பு, நுரையீரல்— ஆகிய 4 முனைகளிலும் இருமலைத் தாக்குகிறது —அதிவிரைவான இருமல் கட்டுப்பாட்டிற்கு உகந்தது • விரைந்து செயல்புரிவது • இன்சுவையுள்ளது • சிக்கனமானது.

**க்ளைகோடின்**—40 ஆண்டுகளுக்கு மேலாக லட்சோபலட்சம் மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானது.

everest/617r/ACW tm

இனிமையான குரலில் ஒரு பெண் பாடத் தொடங்கினுள்.

''காமனது கணைகளுக்குத் தினமும் வேலை வருகிறது.

''இன்று அவன் எங்கள் அரண்மனையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான்.

''எங்கள் ரதியின் உடலும் ஆன்மாவும் இன்று சாந்தி பெறப் போகின்றன.

''தண்ணீரையும் ஆடைகளையும் தவிர வேறு யாரும் தொட்டறியாத அவளது அங்கங்களை,எங்கள் காமன் இன்று தொடப் போகிறுன்.

''காமனது சாகஸங்களை ரதி புரிந்து கொள்வாளாக.

''அவன் முதலில் பயத்தைத்தான் உண்டாக்குவான்; அதன் மூலம்தான் சுகம் இன்னது என்பதைக் காட்டுவான்.

''அவன் பாராமுகமாக இருப்பான்;அது உன் ஆசையை வளர்க்கவே.

''இந்த இரவு இறைவனுல் நிர்ணயிக்கப் பட்டது. ஸ்ரீ ராமனுக்கும், சீதாப்பிராட்டியாருக்கும் நிச்சயிக்கப்பட்ட இரவும் இப்படித்தான்.

''அடி பெண்ணே,

''ஏன் தனியாக நிற்கிறுய்?

''உனது நான்கு விலங்குகளையும் ஒவ்வொன்ருகக் கழற்று.

''எங்கள் மன்மதன் ஆண்மையில் அனுமனை விட உயர்ந்தவன்.

''ஆகவே, யார் பணிகிறுர்கள் என்பதை அவன் கடைசிவரையில் பார்த்துவிடுவான்.

''இந்த ஊடலில் தோற்கவேண்டியவள் நீயே!

''அதன் மூலம் கூடலில் வெல்லப் போகிறவளும் நீயே!

''நெருங்கு; மயங்கு; நிதானத்தை இழந்துவிடு!

''அப்போதுதான் இந்தச் சந்நிதானத்தில் சுகம் கிடைக்கும்!

சாந்தி! சாந்தி! சாந்தி!''

வெளியே பாடல் முடிந்தது; உள்ளே ஊடல் முடியவில்லை. அது ஊடலாகவே இருந்திருந்தால், கூடலுக்காக அவன் பல காலம் காத்துக் கொண்டிருக்கத் தயார். துரதிருஷ்டவசமாக அது ரத்தான பிற்பாடு நடந்த விவாகம்.

பத்மாவதி விழித்துக் கொண்டே நின்று கொண்டிருந்தாள்; அவன் நிம்மதியாகத் தூங்கி முடித்தான். இந்த கைய நாடகங்களுக்கு அவன் முதலில் நடத்திய ஒத்திகை அதுதான்.

வழக்கம் போலவே அவள் பொழுதும் விடிந்தது. அது முதல் தினமும் ஒரு பொழுது விடிந்துகொண்டுதான் இருந்தது. அன்றும் அப்படித்தான் விடிந்தது.

**ஊ**ரார் கண்களுக்காக அவனை வரவேற்கும் பாக்கியத்தை மட்டுமே பெற்ற பத்மாவதி, அவன் கழற்றிக் கொடுத்த நகைகளையும், ஆடைகளையும் அவன் அறையில் வைத்துவிட்டுத் தன் அறைக்குச் சென்றுவிட்டாள்.

அவசர அவசரமாகக் குளித்த ரவிவர்மன், முற்றிலும் மாறுபட்ட உடை அணிந்து கொண்டான்.

இடுப்பிலே ஜரிகை வேஷ்டி; அதன் மீது ஒரு சிவப்புப் பட்டுக் கச்சம். கழுத்திலே சிறிய நவகண்டி மாலை. நெற்றியில் விபூதிப் பூச்சு; அதன் மீது சந்தனக் குழம்பு.

என்ன, ரவிவர்மனும் மதவாதியாகி விட்டானு ? இல்லை. திருவில்லிபுத்தூருக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த சேரமான் பெருமானையும், அடியார்களையும், பரிவாரங்களையும் வழியனுப்ப அவன் அதே வேஷத்தில் புறப்பட்டான்.

சேரமான் பெருமாள் வைஷ்ணவ சம்பிரதாயத்தில் பக்தி மிக்கவர் என்றாலும், விபூதிதான் பூசுவார். அதற்காகவே அவனும் விபூதி பூசிக் கொண்டான். அதன்றியும் சைவர்களும், வைஷ்ணவர்களும் சம்பந்திகள்தானே! திருமாலின் தங்கையைத் தானே சொக்கநாதர் திருமணம் முடித்துக்கொண்டார்!

ரவிவர்மன் அரண்மனையை அடைந்த போது அலங்காரப் பல்லக்கு ஒன்று அங்கே வைக்கப்பட்டிருந்தது. அதைத் தூக்குவதற்குப் பன்னிரண்டு பேர் நின்று கொண்டிருந்தார்கள். அரசன் அரசனுகச் செல்லுதானுல் ரதத்திலேயும், அடியாராகச் செல்வதானுல் பல்லக்கிலேயும் செல்ல வேண்டும் என்பது சம்பிரதாயம்.

இரண்டாம் சேரமான் பெருமாள் அழகிய திருமேனியில் சந்தனம் துலங்க, நெற்றி விபூதி நிலையாமையைக் காட்ட, கற்றைக் குழல் மெதுமெதுவாகச் சடை பிடித்த நிலையில், கழுத்து ருத்திராட்சம் வாழ்க்கையின் நிலை இதுதான் என்பதைக் காட்டும் வகையில் வலது கையால், இடது கையை மூடியபடி வெளியில் வந்தார்.

அவர் பல்லக்கில் ஏறியதும் அந்தப் பல்லக்குக்கு முதலில் தோள் கொடுத்தவன் ரவிவர்மன்.

அவனது செயல்களை யெல்லாம் வியப்போடு நோக்கி நோக்கி அலுத்து விட்ட சேரமானுக்கு இது வியப்பாக இல்லை. பல்லக்குப் புறப்பட்டது.

## அத்தியாயம் 4

# குலசேகர ஆழ்வார்

**சே**ரமான் பெருமானின் வருகையை முன்கூட்டி அறிந்திருந்த பெரியாழ்வார் அவரை வரவேற்கச் சித்தமானுர்.

பாண்டிய நாட்டில் பெரியாழ்வாரின் செல்வாக்கு ஓங்கி நின்ற காலம் அது. 'துறவிக்கு வேந்தன் துரும்பு' என்றபடி மன்னர் குலத்திலிருந்து எதையும் எதிர் பார்க்காமல் வாழ்ந்தவர் பெரியாழ்வார். ஓர் அழகான நந்தவனத்தை மட்டுமே உடைமையாகக் கொண்டவர். பொன் பொருள் இச்சை எதுவும் இல்லாதவர். பாண்டிய நாட்டில் அன்று அவர் பக்த சிகாமணியாகத் திகழ்ந்தார் என்றால் அது பொய்யல்ல. மனித வாழ்க்கையின் அவலத்தைச் சிறு வயதிலேயே உணர்ந்து கொண்டவர். 'இறைவனையன்றிப் பெரும் பொருள் எதுவும் இல்லை' என்று கண்டவர்.

சிறு வயதில் இந்து சம்பிரதாயங்களின் மீது ஏற்பட்ட பக்தியால், திருமாலுடன் தினமும் பேசுகிறவர் என்று புகழ் பெற்றவர். பின்னாளில் ஆண்டாள் என்று பெயர் பெற்ற கோதை நாச்சியார் அவரது ஒரே மகள். நாச்சியார் என்ற பட்டம் பாண்டி நாட்டில் அரச பரம்பரையினருக்கு மட்டுமே உள்ள பட்டமாகும். அந்தப் பட்டத்தைச் சூட்டிக் கோதையை அழகு பார்த்தது பாண்டிய நாடு. காரணம், பெரியாழ்வாரைக் குரு பீடத்தில் மட்டுமன்றி அரச பீடத்திலும் வைத்து அது கௌரவித்தது.

பெரியாழ்வார் அமர்ந்து பேசுவார்; பாண்டிய மன்னர்கள் நின்று கொண்டே பேசுவார்கள். சைவர்கள், வைணவர்கள் இரு சாராருமே பெரியாழ்வாரை மிகவும் கௌரவித்தார்கள்.

பரஞானத்தில் மட்டுமன்றி இக ஞானத்திலும் இறைவன் கண்ணுக்குத் தெரிகிறான் என்பதை நிரூபித்தவர் அவர். தம் மகள் கோதைக்குப் பாடம் கற்றுக் கொடுத்தவரே அவர் தான்.

நாளங்காடி (பகல் கடைத்தெரு) யிலோ, அல்லங்காடி (இரவுக் கடைத் தெரு) யிலோ பெரியாழ்வார் வருகிறார் என்றால் எல்லோரும் ஒதுங்கி அவருக்கு வழிவிட்டுக் கொடுப்பார்கள்.

சேர, சோழ, பாண்டிய, கொங்கு மன்னர்கள் நால்வருக்கும் இவரே குருவாகத் திகழ்ந்தார். இவர்கள் நால்வரும் ஒரே பெரியாழ்வாரின் மாணவர்களாக இருந்தும் இவர்களுக்குள் எப்படிப் போர் மூண்டது என்று சரித்திரம் வியப்போடு நோக்குகிறது. இவரை, 'தென்னாடுடைய பெரியாழ்வார்' என்றழைப்பது பொருந்தும். பெரியாழ்வார் என்ற பெயரே காரணப் பெயர் தான்.

சேரமானை வரவேற்க அவர் செய்திருந்த ஏற்பாடுகள் ஆண்டி ஒருவன் மன்னனை வரவேற்கச் செய்யும் ஏற்பாடுகளே.

அவர் ரத்தினக் கம்பளம் விரிக்கவில்லை. பாதை எங்கும் பட்டுப் பாவாடை விரிக்கவில்லை. வீட்டின் நடுப் பகுதியை நன்றாக மெழுகிக் கோபியினால் கோலம் போட வைத்தார். சிறிது அவல் பொரியும், பாலும் தயார் செய்து வைத்தார். ஒரு தட்டில் ஐந்து புஷ்பங்களை வைத்திருந்தார். அவை அனைத்தும் மொட்டுக்களே.

'அதிகாரத்தில் இருக்கும் போது மனிதனின் ஐந்து புலன்களும் மலராமலேயே இருக்கின்றன. அவை மலரும் போது ஆண்டவனிடம் போய்ச் சேர்ந்துவிடுகின்றன' என்பதே அதன் பொருள்.

திருவில்லிப் புத்தூரில் பெரியாழ்வாரின் இல்லம் ஊரின் எல்லையில் தனியாக இருந்தது. அதுவும் அவரது நந்தவனத்தை ஒட்டியே இருந்தது.

சிறிது தூரத்தில் பரிவாரங்களின் ஓசை கேட்டது.

சேரமான் அப்போது பாண்டிய நாட்டையும் தன் கீழ் வைத்திருந்தானதலால், பாண்டிய நாட்டுப் பரிவாரங்களும் சேர்ந்து வந்து கொண்டிருந்தன.

பெரியாழ்வார் ஆசனத்திலேயே அமர்ந்திருந்தார்.

சேரமானின் பரிவாரங்கள் நந்தவனத்துக்கு வந்து சேர்ந்தன.

இடுப்பிலிருந்த சிவப்புக் கச்சத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டு உள்ளே நுழைந்தான் சேரமான். தன் குருதேவரின் கால்களில் சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தான். அவன் கொண்டு வந்திருந்த சீர் வரிசைகளையெல்லாம் ஒவ்வொன்றாகக் கொண்டு வந்து அவர் முன் வைத்தார்கள்.

''இவை யாருக்காக?'' என்று கேட்டார் பெரியாழ்வார்.

அடக்கத்தோடு, ''தங்களுக்காக'' என்றான் சேரமான்.

''நல்லது. என் மூலம் திருமாலுக்காக'' என்றார் பெரியாழ்வார்.

''தங்கள் செல்வ மகளுக்குத் திருமணம் செய்யும் போது இவை பயன்படுமே?'' என்றான் சேரமான்.

''இவை அவள் வீட்டுக்குத்தான் போகின்றன!'' என்றார் பெரியாழ்வார்.

உள்ளிருந்து நாச்சியாரின் மெல்லிய குரல் அழகாக இசைக்கத் தொடங்கிற்று. அது, 'மைத்துனன் நம்பி மதுசூதன்' கைத்தலம் பற்றிய கதையைக் கூறிற்று.

''நல்லது, குருதேவா! இந்தச் சீர் வரிசைகளைத் தாங்கள் கோவிலுக்கு அனுப்பச் சொன்னது புரிகிறது'' என்றான் சேரமான்.

''அரங்கனோடு ஐக்கியமாகி விட்டால் ஜனனம் மரணம் இரண்டுமே முடிந்து விடுகின்றன. திருமணம் முடியாமலிருக்குமா?''

''இந்த இளம் பிராயத்தில் நாச்சியார் மனித குலத்தை வெறுத்ததும், இறைவனோடு ஐக்கியப்பட்டதும் எப்படி முடிந்தது குருதேவா?'' என்று கேட்டார் சேரமான்.

''காம வெறி'' என்றார் பெரியாழ்வார்.

சேரமானுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

பெரியாழ்வார் சொன்னார்:

''காமம் உடலிலும் உண்டு; உள்ளத்திலும் உண்டு. உடல் வெறி பிடித்துப் போனால், உள்ளம் ஒத்துவிடுகிறது; உள்ளம் வெறி கொண்டு விட்டால் உடல் ஒத்துவிடுகிறது. அவள் உடல் ஒத்துவிட்டது. பக்தியும் ஒருவகைக் காம வெறியே!''

கைகளைக் கட்டிக் கொண்டு சேரமான் கொஞ்ச நேரம் யோசித்தான்.

''குருதேவா, நான் முடி துறப்பதென்று முடிவு செய்து விட்டேன்.''

''இன்னும் உனக்குப் பக்குவம் ஏற்படவில்லை'' என்றார் பெரியாழ்வார்.

''எப்படி, குருதேவா?'' — நடுங்கியபடி கேட்டார் சேரமான்.

''இன்னும் உன் தலையில் மகுடம் இருப்பதாகக் கருதிக் கொண்டிருக்கிறாயே, அது எவ்வளவு பெரிய மடமை? ஏழு உலகங்களிலும் ஒரே ஒருவனுடைய தலையில்தான் மகுடம் உண்டு. அவன் பரந்தாமன் கண்ணனே!'' என்றார் பெரியவர்.

மேலும் அவர் சொன்னார்:

''அவனுக்குக் கிடைக்காத சில ஆசனங்கள் நமக்குக் கிடைக்கின்றன. தச்சர்கள் செய்த அந்த ஆசனங்களைக் கண்டு, நாம் தன்னேரில்லாத தலைவர்கள் என்று எண்ணி விடுகிறோம். எவ்வளவு பக்குவத்துக்கிடையிலும் இந்தக் களை எப்படியோ முளைத்து விடுகிறது. மலையின் மீது முளைத்த செடி பூமியில் முளைத்த கற்பக விருட்சத்தை விடப் பெரியதா? மழைக் காலத்துக் காளான்களுக்கு இருக்கும் அழகு சமயங்களில் மலர்களுக்குக் கூட வாய்ப்பதில்லை. அதனால் அவை மலர்களைவிடச் சிறந்தனவா? 'நான் ஒன்றுமே இல்லை' என்று எவன் நினைக்கிறானோ அவனுக்குத்தான் 'ஆண்டவனைத் தவிர ஒன்றுமே இல்லை' என்ற தெளிவு வரும். இன்னும் நீ அரசனாக இருப்பதாக நினைப்பதால்தானே 'முடி துறக்கப் போகிறேன்' என்ற வார்த்தையைச் சொன்னாய்!''

''ஆமாம், குருதேவா!''

''பக்குவம் முக்கால் பாகம் வந்திருக்கிறது. பாக்கியும் வந்துவிடும்.''

''நான் திருத்தலங்களைச் சேவிக்கப் புறப்படுகிறேன். தங்கள் ஆசியைப் பெறவே வந்தேன்'' என்றான் சேரமான்.

''இதற்கு முன் சேரமான், பெருமாள் ஆனான்; இனி ஆழ்வாராகப் போகிறானா?'' என்று கேட்டார் பெரியாழ்வார்.

''எனக்கு அந்தப் பாக்கியம்...''

''...உண்டு. அவனிடம் யார் யாரெல்லாம் ஆழ்ந்து விட்டார்களோ, அவர்களெல்லாம் ஆழ்வார்களே. இதுவரை ராஜ குலசேகரனாக இருந்த நீ இனி மனித குலசேகரனாக ஆகப் போகிறாய். அதனால் உலகம் உன்னை இனி குலசேகர ஆழ்வார் என்றழைக்கட்டும்.''

பெரியாழ்வார் இப்படிச் சொன்னதும் பூஜை யறையில் இருந்த கோதை நாச்சியார் வெளியே வந்தார்.

''பார்வேந்தன் பரந்தாமனோடு கலக்கப் போகும் செய்தியைக் கேட்டேன்'' என்றார்.

''ஆமாம் தாயே!'' என்றார் குலசேகர ஆழ்வார்.

—ஆம்; இனி நாம் அவரைக் குலசேகர ஆழ்வார் என்றே அழைப்போம்.

தம் இரண்டு கைகளாலும் குலசேகர ஆழ்வாருக்கு ஒரு பரிசைக் கொடுத்தார் நாச்சியார். அது ஒரு விளாம்பழம். ஆம்; தோலும் பழமும் ஒட்டாத ஒன்று விளாம்பழம் அல்லவா? உடலும் உள்ளமும் வேறுபட்டு விட்டன என்பதற்கு அது சாட்சி.

பின்பு அனைவரும் கோவிலுக்குப் புறப்பட்டார்கள். உள்ளம் உருக, உடல் உருக அங்கே பாடிக் கொண்டே இருந்தார் குலசேகர ஆழ்வார். அந்திபடும் நேரத்தில் அவருக்குப் பிரக்ஞையை உண்டாக்கினார் பெரியாழ்வார்.

* * *

இரண்டாம் சேரமான் பெருமாள், குலசேகர ஆழ்வார் என்ற பட்டத்தோடு நாடு திரும்பினார். வஞ்சியின் எல்லையில் அவரை அமைச்சர் பிரதானியர், நாராயண நம்பூதிரி அனைவரும் வரவேற்றார்கள்.

மன்னர்கள் போருக்குப் போய்த் திரும்பினாலும், வேறு காரணங்களுக்காக அடுத்த நாடு சென்று திரும்பினாலும் ராஜகுலப் பெண்கள் எல்லையில் வந்து வரவேற்பதில்லை. அன்று அதிசயமாக ரவிவர்மனின் மனைவி பத்மாவதியும், அவனது சகோதரிகள் ஐவரும் எல்லைக்கு வந்திருந்தார்கள். எதிலும் முதலாளாக நிற்கும் பாஸ்கர ரவிவர்மனை அன்று காணவில்லை. (தொடரும்)

இன்னிக்கி என் இண்டர்வியூவை
எப்படித்தான் சமாளிக்கப் போறேனோ?
எனக்குக் கடுமையான தலைவலி.

நான் சொல்றதைக்
கேளுங்க, அனாஸின்
சாப்பிடுங்க!

# விரைவில் நிவாரணம் பெற சக்தி வாய்ந்த, நம்பகமான அனாஸின் சாப்பிடுங்கள்

**சக்தி வாய்ந்தது:** உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனாஸின். ஆகையால்தான் அனாஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

**நம்பகமானது:** டாக்டரின் நம்பகமான மருந்தைப் போல பல மருந்துகளின் கலவையே அனாஸின். ஆகையால்தான் லட்சக்தணக்கானவர்கள் அனாஸின் சாப்பிடுகிறார்கள்; சிபாரிசும் செய்கிறார்கள்.

*ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவினால் ஏற்படும் வலிகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி, பல்வலி ஆகியவற்றுக்கு அனாஸின் சக்திவாய்ந்த நிவாரணி.*



சக்தி வாய்ந்த, நம்பகமான

**அனாஸின்**

இந்தியாவின் புகழ் பெற்ற வலி–நிவாரணி

Regd. User of TM: Geoffrey Manners & Co., Ltd.

AJ2/8-74



சுகமில்லாமல் இருக்கிறோம் என்பதை ஒப்புக் கொள்வதே கசப்பான ஒரு காரியமாக இருந்தது சங்கரனுக்கு. உடல்நலமில்லாத காரணத்தால் ஒருவருடைய உதவியை நாடுவது — அந்த நபர் ஒரு டாக்டராகவோ, தாதியாகவோ இருந்தால்கூட — அவனுடைய சுதந்திரத்தின் எல்லைகளை மீறுவதாக அவன் எண்ணினான்.

வெளியே காற்றில்லாமல் கனமாகப் பெய்து கொண்டிருந்த மழையை அவனுடைய வெறுமையான கண்கள் நோக்கிக் கொண்டிருந்தன. அந்த மழைத் தாரைகளைக் காட்டிலும் சன்னமான பல நினைவுத் தொடர்கள் அவன் நெஞ்சில் வலைகளாய்ப் பின்னிக் கொண்டிருந்தன. அந்த வலைகளில் சிக்குண்டு அவனையும் சிக்க வைக்க முயல்வன போலப் பல உருவங்களும் தோற்றங்களும் அங்கே தவித்துக் கொண்டிருந்தன.

ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு ஜன்னலுக்கு அருகில் வந்து நின்று கொண்டு வெளியே பார்த்தான். அவன் நின்று கொண்டிருந்த இடம் ஒரு மாடி வீட்டின் பிற்பகுதி. வீட்டின் பின்புறம் கொஞ்சம் தூரம் வரை வயல்களும் அதற்கப்பால் ஒரு ரயில் பாதையும் அந்த மழையில் ஓர் எழிலுடன் தெரிந்தன. அந்த இயற்கையையெல்லாம் அவனை ரசிக்கவிடாதபடி அவன் நெற்றி இலேசாக விண் விண் என்று தெறித்துக் கொண்டிருந்தது. அவனையும் அறியாமல் அவனுடைய விரல்கள் அவனுடைய நெற்றியை வருடின.

'காப்பி' என்ற குரலைக் கேட்டு அவன் திடீரெனத் திரும்பிப் பார்த்தான்.

பிரேமா காப்பிக் கோப்பையைக் கட்டில் அருகில் இருந்த மேஜை மீது வைத்தாள்.

தனது எல்லைக்குள் பிரவேசித்துவிட்ட ஓர் அந்நியனைக் காணும் விரோத உணர்ச்சியோடு அவளை நோக்கினான். வெகு இயல்பாகத் தலையை உயர்த்தி அவனைப் பார்த்த அவள் அவனது தோற்றத்தைக் கண்டு துணுக்குற்றது நன்றாகத் தெரிந்தது. முகம் சிறுத்துப் போய், கருமை அடைந்து அவனுடைய முப்பத்தைந்து வயதையும் வெளிப்படுத்தும் ஒரு விகாரத்துடன் அவன் நின்றான். அவள் பாவ மாற்றங்களை அறிந்த சங்கரன் தான் நலமில்லாமலிருப்பது இவ்வளவு நன்றாகத் தெரிகிறதா என்று எரிச்சலுடன் எண்ணினான்.

''உங்கள் உடம்புக்கு என்ன, ஜுரமா?'' என்று கேட்டுக் கொண்டே அவனை நெருங்கினாள் பிரேமா. அவன் ஏதும் சொல்வதற்கு முன்னாலேயே அவன் நெற்றியில் கை வைத்துப் பார்த்தாள் அவள். தீயாய் எரிந்து கொண்டிருந்தது.

அவள் எதிர்பாராதவிதமாகத் திடீரென அவள் கையை உதறித் தள்ளினான் சங்கரன். அவள் அவனை வியப்போடு பார்த்தாள்..

'' எனக்கு உடம்பு நன்றாகத்தான் இருக்கிறது '' என்று எரிந்து விழுந்தான் அவன்.

தன்னை இந்த உலகத்தோடும் மற்றவர்களோடும் பந்தப்படுத்த முயலும் ஒரு கருவியாக எண்ணி அவளை வெறுத்தான்.

எதுவும் சொல்லத் தோன்றாமல் அவள் உள்ளே செல்லத் திரும்பினாள்.

'இரவு பார்த்த பிரேமாவா இவள்? அளவற்ற ஆசையினைத் தூண்டிவாக்கி அணைப்பின் இறுக்கத்தில் நெஞ்சோடு நெஞ்சாய் இணைந்து படைப்பின் ரகசியத்தை வென்ற வேளையில் காதோடு காதாய்க் கேட்டாளே 'எனக்கு உங்கள் குழந்தை தேவை' என்று, அதே பிரேமாவா இவள்?'

அலுவலகத்தில் சங்கரனுக்குப் பெயர் சந்நியாசி.

தன்னுடைய இருபதாவது வயதில் அங்கு வேலைக்குச் சேர்ந்தது முதல் அவன் யாருடைய நட்பையும் இதுவரை சம்பாதித்ததில்லை. வீட்டில் அவன் மனம் அடைந்த சூடு தணியவே இல்லை. தன்னை நெருங்கியவர்களைக் கண்டு அஞ்சி ஓட்டுக்குள் கால்களையும் தலையையும் இழுத்துக் கொள்ளும் ஆமையைப் போலத் தனக்குள் ஒடுங்கினான்.

ஒரு வீட்டின் மாடியில் நிரந்தர பிரம்மச்சரியம் என்ற வைராக்கியத்துடன் குடியிருந்து வந்த அவன் பிரேமாவோடு தொடர்பு கொண்டது மற்றவர்களுக்கு மட்டும் அல்ல. பிரேமாவுக்கும் அவனுக்குமேகூட ஆச்சரியமாக இருந்தது.

அவள் அந்த அலுவலகத்துக்குப் புதியதாக மாற்றலாகி வந்தவள். அவள் வந்து சேர்வதற்கு முன்னமேயே அவளைப் பற்றிய கதைகள் வந்து சேர்ந்திருந்தன. முன்பு வேலை பார்த்த இடத்தில் யாரோ ஓர் இளைஞனுடன் நெருங்கிப் பழகியிருந்த அவள் திடீரென ஒரு நாள் அவனுடன் காணாமல் போய்விட்டாள். ஒரு மாதத்துக்குப் பிறகு அந்த இளைஞனின் தந்தை ஒரு நகரத்தின் ஹோட்டல் அறை ஒன்றில் அவர்களைக் கண்டதோடு அவர்களது

என்.எம்.நஜிராஜ்




காதல் அமரத்துவம் பெற்றுவிட்டது. அந்த இளைஞன் அவளது வருங்காலத்துக்கோ தான் விளைக்கிய அவள் நம்பிக்கைகளுக்கோ எந்த வித வழியும் சொல்லாமல் தன் தந்தையுடன் ஒரு கோழை போல் சென்றுவிட்டான்.

சில நாட்களுக்குப் பிறகு அவள் மறுபடியும் அலுவலகத்துக்கு வந்த பொழுது அவள் பெயரைச் சுற்றி ஒரு மௌனிகக் கதை பரவி யிருந்தது. அவளுக்கு மேலதிகாரியாக இருந்த யாரோ ஒரு புண்ணியவான் அவள் மீது கருணை கொண்டு அவளுக்கு மாற்றல் வாங்கித் தந்தார்.

சங்கரனும் அவளும் தங்களது எல்லைகளை யும் இயல்புகளையும் நன்கு புரிந்தே இருந்தனர்; ஒரு விபத்தில் ஆரம்பித்த அவர்கள் உறவு எழுதப்படாத ஓர் ஒப்பந்தமாக மாறியது.

தன் 'செக்ஷன் ஹெட்' சங்கரன் மீது அவளுக்குத் தனியான மதிப்பு ஏதும் ஏற்பட வில்லை. ஆயினும் அவன் ஏதோ ஒரு விசித்திர மனிதன் என்பது மட்டும் அவளுக்குப் புரிந் தது. அலுவலகத்தில் வழங்கப்பட்ட பட்டப் பெயரும் அவனைப் பற்றி அவர்கள் வம் பளந்த செய்திகளும் அவள் காதுகளுக்கும் எட்டியிருந்தன.

எனவே இந்த மனிதனின் குணங்களும் எண்ணப் போக்கும் எப்படிப்பட்டவை என்று தெரியாமல் அவனைப் பற்றிய எந்தவிதமான முடிவுக்கும் பிரேமாவால் வர முடியவில்லை.

எனவேதான் ஒரு விடுமுறை நாளில் 'ஓவர் டைம்' பார்த்தபொழுது எப்படியோ அவளும் அவனும் ரிக்கார்டு ரூமில் தனித்திருக்க ஏற் பட்டபொழுது சங்கரன் தன் எல்லைகளை மீறி



## இவருக்கு ஒருத்தியா?

பாண்டவர்கள் ஐந்து பேருக்கும் திரௌபதி ஒருத்தி மனைவி. இவருக்கு ஒருத்தி மனைவியா? இதன் தத்துவ விளக்கம் என்ன?

பரம்பொருளாகிய சிவனுக்கு முகங்கள் ஐந்து. அதர்மம் ஓங்கும் பொழுது உண்டாகும் முகம் ஒன்று. அதன் பெயர்: "அதோ முகம்".

பாண்டவர்கள் ஐந்து பேர். கௌரவர்களின் அதர்மத்தை ஒழிக்க ஆறாவது முகமாக, அதோ முகமாக தர்மத்தை நிலைநாட்ட உண்டான முகம் திரௌபதி.

அதர்மத்தை அழித்துத் தர்மத்தைக் காத்திட சிவனுக்கு அதோ முகம் உண்டானதைப் போல, கௌரவர்களின் ஆணவத்தை அழித்திடப் பாண்டவர்கள் ஐந்தோடு, அதோ முகமாகத் திரௌபதியும் சேர்ந்தாள்.

இதுவே மகாபாரதக் கதையின் கரு. இதனை மனத்தில் கொண்டு மகாபாரதக் கதையினை உணர வேண்டும்.

ஒருவன் மிகவும் மோசமான நிலையை அடைந்து விட்டால், "அதோகதி!" ஆகிவிட்டான் என்கிறோம்.

-- புலவர் கீரன் மகாபாரதக் கதையில் கூறக் கேட்டவர்: தாரிகை

---

றான். இதனை எதிர்பார்க்காததாலோ அல்லது அவனை அறியாமலேயே அவளது உள்மனம் இதனை எதிர்நோக்கியிருந்ததாலோ அவள் அவனை எதிர்க்கவில்லை.

அதனைத் தொடர்ந்து இரண்டு நாட்கள் அவள் அலுவலகத்துக்கு வராதபொழுது சங்கரன் என்னென்னவோ எண்ணிச் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தான். இனி மாற்ற முடியாத தன் செயலுக்கான காரணங்களைத் தேடுவதை விட அடுத்து என்ன செய்யலாம் என்று சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்துவிட்டவனாய் அவளுடைய வருகையை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான்.

மூன்றாம் நாள் எந்தவிதமான மாறுதலுமின்றி அவள் வழக்கம் போலவே வந்தாள்.

"நான் உன்னோடு கொஞ்சம் தனியாகப் பேசவேண்டும்" என்று சங்கரன் அவள் மேஜையைத் தேடி வந்து தாழ்ந்த குரலில் அவளிடம் சொன்னபோது பிரேமா கொஞ்சம் யோசித்தாள். அவள் பதிலை எதிர்பார்க்காமலே அவன் சென்ற தோரணை அவளிடமிருந்து எந்த மறுப்பையும் எதிர்பார்க்கவில்லை என்று காட்டியது.

அன்று மாலை அனைவரும் சென்ற பிறகு அவளுக்காகவே அவன் காத்துக் கொண்டிருந்தான்.

அவன் முன்னே ஒரு ஸ்டூலின் மீது அமர்ந்து கொண்டு அவனே பேசட்டும் என்பது போல் பிரேமா மௌனமாக இருந்தாள்.

ஏதோ ஆபீஸ் சம்பந்தமான சிக்கல் ஒன்றை விவாதிப்பது போன்ற பாவனையில் அவளை நேராகப் பார்த்துப் பேசினான் சங்கரன்.

"இதோ பார், பெண்ணே! நான் அந்த நிகழ்ச்சிக்காக என் பொறுப்பிலிருந்து தப்பித்துக்கொள்ள எந்த நொண்டிக் காரணத்தையும் தேடவில்லை. இதில் நம் இருவருக்கும் சம பங்கு உண்டென்றாலும் என்னை முழுமையாக விடுவித்துக்கொள்ள இது போதாது. நான் இங்கே உன்னைக் கூப்பிட்டதும் அதைப் பற்றிப் பேசுவதற்கு அல்ல... என்னைப் பற்றி மற்றவர்கள் சொல்வதைவிட நானே சொல்லிவிடுவது நல்லது என்று நினைக்கிறேன். எனக்கு மனிதர்களிடமும் உறவுகளிடமும் எந்த விதமான பிடிப்போ நம்பிக்கையோ கிடையாது. இவைகள் எல்லாம் எனது தனிமையிலும் சுதந்திரத்திலும் செய்யப்படும் ஊடுருவல்கள். என்னைப் பொறுத்தவரையில் நட்பு அன்பு இவையெல்லாம் சுயநலத்தின் வெளிப்பாடுகளே. எனக்கு உறவினர்களோ நண்பர்களோ யாரும் கிடையாது..."

பிரேமா அவனை ஆச்சரியத்தோடு பார்த்தாள். இவனைப் பற்றி மற்றவர்கள் சன்னியாசி என்று கூறியபோது அதற்கு இவ்வளவு உக்கிரமான பொருள் இருக்கும் என்று அவள் எதிர்பார்க்கவில்லை.

"நான் உன்னைப் பற்றி தெரிந்து கொள்ள வேண்டும்" என்றான் சங்கரன்.

அவள் பார்வையே கேள்வியாகியது.

சற்று நேர மௌனத்துக்குப் பிறகு சங்கரன் கூறினான்: "நான் நேரடியாகவே கேட்டு விடுகிறேனே. என்னோடு சேர்ந்து வாழ உனக்குச் சம்மதமா?"

பிரேமாவின் முகத்தில் மற்ற உணர்ச்சிகளை விட வியப்பே அதிகம் தெரிந்தது இந்தக் கேள்விக்கு என்ன பொருள்?

"நீயே எதையும் கற்பனை செய்வதற்கு முன்பு என்னை நான் தெளிவாக்கி விடுகிறேன். உன்மீது ஓர் அன்பாலோ அல்லது ஒரு வாழ்க்கைத் துணை வேண்டும் என்ற ஏக்கத்தாலோ நான் உன்னைக் கேட்கவில்லை. அப்படிப்பட்ட மயக்கங்கள் எதுவும் எனக்குக் கிடையாது. நான் விரும்புவது ஓர் ஒப்பந்தம்தான். எந்த விதமான சிக்கலும் அற்ற ஒரு ஏற்பாடு மட்டுமே. சட்ட திட்டங்கள், கட்டுப்பாடுகள் எதுவும் இல்லாத ஒரு கூட்டு வாழ்க்கை."

அவன் சொல்லியதன் பொருள் அவளுக்கு நன்றாகவே விளங்கியது. திருமணம் அல்லாத ஒரு திருமணம் இது என்பதும் ஏதோ ஒரு பசி தீர்க்கும் ஒப்பந்தம் இது என்பதும் அவளுக்குப் புரிந்ததால் அவள் முகம் திடீரெனச் செம்மையுற்றது.

"யோசித்துச் சொல்" என்று கூறிவிட்டு அவன் எழுந்து கொண்டான்.

அவனது தலைவலி 'நான் இருக்கிறேன், இருக்கிறேன்' என்று உணர்த்திக் கொண்டே இருந்தது. வெளியே மழை மேகம் மூடியிருந்ததால் சூரியன் தெரியவில்லை. மணி ஆறரை அல்லது ஏழு இருக்கும் என்று எண்ணிக்கொண்டே திரும்பியவன் கண்களில் சுவர்க் கடிகாரம் மணி எட்டரை என்று அறைந்தது. கையில் ஏதோ மாத்திரையுடன் பிரேமா அங்கு வந்தாள். அதை அவனிடம் நீட்டினாள்.

அடுத்த விநாடி அவன் கையிலிருந்த காப்பிக் கோப்பை பலத்த ஓசையுடன் சுவரில் மோதிப் பல துண்டுகளாகச் சிதைந்து

# புரதமற்ற கேசம் வேரற்ற மரம்போல் வீழ்கிறது.



# உங்களது பிரச்னை இதுவானால் தொடர்ந்து படியுங்கள்...

**புரதம் உங்கள் கேசத்திற்கு இன்றியமையாத போஷாக்கு**

கேசத்தில் புரதமே விலைமதிப்பற்ற இயற்கைப் பொக்கிஷம் என விஞ்ஞானிகள் நிரூபித்திருக்கின்றனர். ஆனால், சூரியன், காற்று, சில சோப்புகள், சாயங்கள், உடம்பின் வியர்வை—இவை உங்கள் கேசத்திற்கு உயிருக்கொப்பான புரதத்தை அழித்து விடுகின்றன. இதன் விளைவாக உங்கள் கேசம் ஒளியிழந்து, களையற்று, மங்கிப்போய் உலர்ந்து விடுகிறது. நுனிகள் பிரிந்து விடுகின்றன. நீங்கள் ப்ரஷ் செய்யும் ஒவ்வொரு முறையும் கேசம் உதிர்கிறது. புரத ஊட்டமே கேசத்திற்கு மங்காத ஒளியையும் குன்றாத உறுதியையும் உயிர்ச்சக்தியையும் தருகிறது.

**டியாரா எக் ஷாம்பு, முட்டை தரும் புரதத்தை கேசத்திற்கு தந்து வளர்க்கிறது.**

முட்டை புரதத்தின் மூலாதாரம் என்பது உலகமறிந்த உண்மை. புத்தம் புதிய முட்டைகளுடன் விஞ்ஞான ரீதியாக கலக்கப்பட்டிருப்பதால், வெண்கரு, அமினோ அமிலங்கள், வைட்டமின் ஏ மற்றும் டி போன்ற இயற்கை தரும் எல்லா வளங்களும் நிறைந்துள்ளன. உங்கள் கேசத்திற்கு புத்துயிர் அளிக்க அதைத் தவறாமல் உபயோகியுங்கள். தலைமயிர் உதிர்வதைத் தடுத்து, ஆரோக்கியமிக்க இயற்கையான வளர்ச்சிக்கும் பட்டுப்போன்ற பளபளப்புக்கும் அதுவே மிகவும் சிறந்தது.



புரதமின்றி கேசம் உயிரற்று களையிழந்து உதிர்ந்து விடுகிறது.



புரதம் செறிந்த கேசம் நுனிகள் பிரியாமல், இயற்கை எழிலும் ஆரோக்கியமும் வளர்ச்சியும் ஓங்கி விளங்குகிறது.




## டியாரா

### எக் ஷாம்பு

புரதம் செறிந்தது, அதைவிரும்பு
கேசத்தின் பளபளப்பு
அது தரும் அழகின் சிறப்பு.

இந்தியாவில் தயாரிப்பவர்கள்:
**ஜே. கே. ஹெலன் கர்ட்டிஸ் லிமிடெட்.,** பம்பாய்-400 038.

இவ்விடம் விசாரிக்கவும்: பாரி & கோ. லிட., சென்னை, கோயம்புத்தூர், மதுரை, திருச்சி, சிகந்தராபாத், விஜயவாடா, விசாகப் பட்டணம், கோழிக்கோடு, கொச்சி, பெங்களூர், மங்களூர்.

Interpub JK T 1/ 75 Tm.

சிதறியது. எஞ்சியிருந்த காப்பியில் கொஞ்சம் அவள் மீதும் தெறித்தது.

அவனுடைய இந்த அநாகரிகமான செயலுக்கும் கோபத்துக்கும் காரணம் புரியாமல் பிரேமா அவனை விநோதமாகப் பார்த்தாள். அவனோடு பேசுவது எந்த விதமான பலனையும் தராது என்பது மட்டும் புரிந்தது. மாத்திரையை மேஜையின் மீது வைத்துவிட்டுத் தன்னுடைய வேலைகளைக் கவனிக்க உள்ளே சென்றாள்.

''எனக்கு இன்று டிபன் தேவையில்லை, ஓட்டலில் சாப்பிட்டுக் கொள்கிறேன்'' என்று அவளுக்குப் பின்னே இரைந்து சொன்னான் அவன்.

பிரேமாவுக்கு அவன் போக்குப் புதிராகவே இருந்தது. சில மாதங்களுக்கு முன்பு அவள் அவன் திட்டத்தை ஏற்றுக் கொண்டு அவனோடு வந்தபொழுது எப்படிப்பட்ட வாழ்க்கை அவளுக்கு இருக்கும் என்பதை அவள் ஊகித்தே வைத்திருந்தாள். தனக்கு ஒரு கௌரவமான குடும்பத் தலைவி என்ற ஸ்தானத்தை இந்த உலகம் அளிக்காது என்று தெரிந்திருந்தும் ஏதோ ஓர் உந்துதல் தான் இந்த ஏற்பாட்டுக்கு அவளை ஒப்புக் கொள்ளச் செய்தது.

சங்கரன் மிகவும் புத்திசாலித்தனத்துடன் சில காரியங்கள் செய்தான். அந்த ஊரிலேயே வேறு ஒரு கிளை அலுவலகத்துக்கு அவளுக்கு மாற்றல் வாங்கித் தந்தான். அவரவர் ஊதியத்தை அவரவர்களே வைத்துக் கொண்டனர். வீட்டுச் செலவுகளை அவனே ஏற்றுக் கொள்வதுதான் நியாயம் என்று உணர்ந்து அவளுக்கு அதில் ஏதும் பங்கு வைக்கவில்லை. காலை டிபனும் இரவு உணவும் மட்டும் பிரேமா சமைப்பாள். மத்தியானம் அலுவலகத்துக் காண்டீனிலோ அல்லது அருகில் உள்ள ஓட்டல்களிலோ இருவரும் உணவை முடித்துக் கொள்வார்கள்.

அவனுடைய வயிறு பசித்தபோது அதற்கு உணவு தேடியது போல் அவன் உணர்வுகள் விரும்பியபொழுது பிரேமாவை அவன் நாடினான். ஆனால் எப்படி அவனால் புலன்களையும் உணர்வுகளையும் பிரித்து எந்திரமான வாழ்க்கை நடத்த முடிகிறது என்பது அவளுக்குப் புதிராகத்தான் இருந்தது. நாளடைவில் அவன்பால் ஒரு பற்றுதலை வளர்த்துக்கொண்ட அவள் கொஞ்சம் கொஞ்சமாக அவனுடைய மெல்லுணர்வுகளை மீட்ட எண்ணி நேற்று இரவு அவன் அவள் புலன்களில் அடைக்கலம் தேடியபொழுது—சொன்னாள், ''நான் உங்கள் குழந்தைக்குத் தாயாக விரும்புகிறேன்'' என்று.

ஏதோ மரண தண்டனையைக் கேட்ட கைதி போல அவன் முகம் மாறுவதை அவள் வேதனையோடு கவனித்தாள்.

பிரேமா தன் வேலைகளையெல்லாம் முடித்துக்கொண்டு ஆபீசுக்குக் கிளம்பியபொழுது அவன் பாத்ரூமிலிருந்து பச்சைத் தண்ணீரில் குளித்துவிட்டுச் சொட்டச் சொட்ட நனைந்தபடி வெளியே வந்து கொண்டிருந்தான். அவனுக்கு உண்மையிலேயே உடம்புக்கு ஒன்றும் இல்லையாம்.

பதினொரு மணிக்குள் சங்கரனது ஜுரம் அவனால் மேலும் வேலை செய்ய முடியாது என்ற நிலையை எட்டி விட்டது. பியூனை விட்டு ஒரு மாத்திரையும் காப்பியும் வாங்கி வரச் சொன்னான்.



''கட்டம் போட்ட என் புடவை போலவே நீங்களும் கட்டம் போட்ட லுங்கி வாங்கிக் கட்டிட்டீங்களே....''
''நான் துவைப்பது லுங்கியா? புடவையான்னு கண்டு பிடிக்க முடியாமல் பக்கத்து போர்ஷன்காரன் திண்டாடட்டுமே !''

மாத்திரையை வாங்கிவந்த பியூன், 'லீவு போட்டுவிட்டு டாக்டரைப் போய்ப் பாருங்களேன் சார்' என்று சொல்லிவிட்டுப் போனான். சில நிமிடங்களுக்குப் பிறகு சங்கரன் லீவு எழுதிக் கொடுத்துவிட்டு வெளியே வந்தான். மழை நின்று நன்றாக வெய்யில் அடிக்க ஆரம்பித்திருந்தது. அவனது ஜுரத்துக்கு அந்தக் கடும் வெய்யில் மிகவும் இதமாக இருந்தது. அந்த இதத்தை அனுபவித்துக்கொண்டே நேராக வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

காலையில் அவன் வீசியெறிந்து உடைந்து சிதறிய பீங்கான் துண்டுகள் அப்படியே கிடந்தன. அதைக் கண்டவுடனே அவனுக்குத் திடீரென்று களைப்பு மேலிட்டது. சோர்வுடன் சட்டையைக்கூடக் கழற்றாமல் படுக்கையில் சாய்ந்தான். அப்பொழுதுதான் அவனது தேகம் நடுங்குவது அவனுக்குத் தெரிந்தது.

போர்வையை இழுத்து நன்றாக மூடிக் கொண்டபொழுது இந்த உலகத்தில்தனித்து விடப்பட்ட ஓர் அநாதையைப் போல் பலவீனமாய் உணர்ந்தான். இதுநாள் வரையில் தன்னுடைய பலமாகக் கருதி வந்த அந்தத் தனித்தன்மை — இந்த உலகத்தோடு ஒட்டாமல் — எல்லா உறவுகளையும் அறுத்துக் கொண்டு சென்ற சன்னியாசம் இப்பொழுது திடீரென அவனது மிகப் பெரிய குறையாக மாறியது.

பத்தொன்பதாவது வயதில் சங்கரனுக்கு இப்படித்தான் ஒருமுறை ஜுரம் வந்தது. சில மாதங்களுக்கு முன்புதான் அவன் கல்லூரியை விட்டுப் படிப்பு முடித்து வந்திருந்தான். இந்த உலகத்தை நேருக்கு நேராக ஒரு புதிய கோணத்தில் பார்த்தபொழுதுதான் இந்த மனிதர்களும் அவர்களது நடத்தையும் எவ்வளவு தூரம் செயற்கையானவை என்பது தெரிந்தது. சிறிய வயதிலேயே தாயை

இழந்திருந்த சங்கரனுக்கு இரண்டு தமக்கைகள் இருந்தனர். அவர்களுக்கும் பல ஆண்டுகளுக்கு முன்பே திருமணம் ஆகி அவனோடு எந்த விதமான பிடிப்பும் இல்லாமல் கடனே என்று உறவினர்களாக இருந்தனர். தாய் வீட்டின் மீது அவர்களுக்கு இருந்த பற்றெல்லாம் அங்கிருந்து கிடைக்கக் கூடிய ஆதாயத்தைக் கருத்தாகக் கொண்டே இருந்தது.

சில நாட்களாக உடல் நலமில்லாதிருந்து அவன் தந்தை காலமானபொழுது அவர்கள் கொஞ்சம் கூடத் துயரமின்றி இருந்ததும் அவனது துயரத்தைவிட, தந்தை சேர்த்து வைத்ததில் எவ்வளவு கிடைக்கும் என்பதிலேயே அவர்களது கவனம் இருந்ததும் சங்கரனுக்குப் பேரதிர்ச்சியாக இருந்தது. என்ன மனித மிருகங்கள் இவர்கள்! இரத்த உறவில்கூட அன்பைக் காட்ட முடியாத இவர்களா மற்றவர்களிடம் அன்பைப் பொழியப் போகின்றனர்?

எதையோ எதிர்பார்த்து ஏமாறுவதைவிட எதையுமே எதிர்பார்க்காமல் வாழ்ந்துவிடுவது என்று ஒரு திடமான முடிவுக்கு வந்தான். கிடுகிடுவென்று இருந்த சொத்துக்களை மூன்றாகப் பிரித்து மற்ற இருவருக்கும் கொடுத்தது போகத் தன் பங்கை வந்த விலைக்கு விற்றான். பிறகு அந்த ஊரின் மண்ணையே மிதிப்பதில்லை என்ற வைராக்கியத்துடன் இந்த நகருக்கு வந்து ஒரு வேலை தேடிக்கொண்டான்.

சங்கரன் கண் விழித்தபோது அவன் உடம்பு வியர்த்துக் கொண்டிருந்தது. போர்வையை விலக்கிவிட்டு எழுந்து படுக்கையிலேயே அமர்ந்தான். களைப்புக் கொஞ்சம் நீங்கியது போல் இருந்தது. அவனுக்கு நேராகத் திறந்திருந்த ஜன்னல் வழியே வெளியே பார்த்தான். தெற்கு நோக்கி ஒரு ரயில் விரைந்து கொண்டிருந்தது. 'அது என்ன, மத்தியானம் செல்லும் எக்ஸ்பிரஸா?' என்று கேட்டுக் கொண்டே கடிகாரத்தைப் பார்த்தவனுக்கு அதிர்ச்சியாக இருந்தது. மணி நாலரை ஆகியிருந்தது.

இனி பிரேமா வந்துவிடுவாளே, அவள் வரும்பொழுது நோயாளியாகப் படுத்திருக்கக்கூடாதே என்ற முடிவில் அவசரம் அவசரமாக எழுந்து வெளியே கிளம்பினான். கால் போன போக்கில் சிறிது தூரம் நடந்து சென்றான். பிறகு அந்தப் பழைய பாலத்தின் மீது சிறிது தூரம் நடந்து சென்று அதன் இரும்புக் கிராதியில் ஏறி அமர்ந்தான்.

போக்கு வரத்தெல்லாம் அந்தப் பாலத்தின் அருகிலேயே கட்டப்பட்டுள்ள ஒரு புதிய பாலத்தின் வழியே சென்று கொண்டிருந்ததால் பாதசாரிகள் சிலர் மட்டும் இந்தப் பழைய பாலத்தில் சென்று கொண்டிருந்தனர்.

நேரம் செல்லச் செல்ல அவனுக்குக் கொஞ்சம் கொஞ்சமாக உண்மைகள் புலனாகத் தொடங்கின. ஏதோ ஓர் அனுபவத்தில் சலிப்படைந்த அவன் இப்படி உலகத்தையும், அவனை நாடி வந்தவர்களையும் விட்டு விலகி ஓடுவது எவ்வளவு நியாயமற்றது என்று உணர்ந்தான். பிரேமாவின் வாழ்க்கையை எவ்வளவு தூரம் எந்திரமாக்கி விட்டோம் என்று எண்ணியபொழுது அவள் நேற்று இரவு ஆதங்கத்தோடு கேட்ட அந்தக் கேள்வி அவன் இருதயத்தில் எதிரொலித்தது. 'நான் உங்கள் குழந்தைக்குத் தாயாக வேண்டும்.'

'ஓ, எவ்வளவு ஏக்கம் நிறைந்த வார்த்தைகள் அவை! எப்படி ஈரமே இல்லாமல் என் நெஞ்சம் உலர்ந்தது!' என்று சங்கரன் வியந்தான். இந்த அறிவு வந்தவுடன் அவன் மனதில் திடீரென அன்பு ஊற்றெடுத்து அதை யார் மீதாவது செலுத்த வேண்டும் என்ற வெறியாகியது.

அவன் சுயநினைவு பெற்றபொழுது இரவு கவிந்திருந்தது. அவனுக்குக் குளிரடித்தது. இரும்புக் கிராதியிலிருந்து எழுந்து வீட்டை நோக்கி நடந்தான்.

வீடு இருளில் மூழ்கிக் கிடந்தது. கதவைத் திறந்து விளக்கைப் போட்டான். அவனுடைய அறை துப்புரவாக இருந்தது. தரை கூட்டப்பட்டுப் பீங்கான் துண்டுகள் எல்லாம் எடுக்கப்பட்டிருந்தன. அவனுடைய படுக்கை ஒழுங்காக மடித்து வைக்கப்பட்டிருந்தது.

படுக்கையில் அமர்ந்து சிறிது யோசித்தான். வயிறு பசித்தது. அப்பொழுதுதான் அருகில் மேஜையின் மீது இருந்த பிளாஸ்க் அவன் கண்ணில் பட்டது. திறந்து பார்த்தபொழுது உள்ளே சூடான பால் இருந்தது. கொஞ்சம் ஊற்றிக்கொண்டு பருகினான்.

ஒரு திடீர் சந்தேகத்தின் மேல் எழுந்து சென்று அடுத்த அறையைப் பார்த்தான். அவன் மனம் பகீர் என்றது. அவளுடைய புடவைகள், துணி, பெட்டி, எதையுமே காணோம்.

அவள் போய்விட்டாளா? இந்த அதிர்ச்சியிலிருந்து அவன் மீள்வதற்கு முன் 'டைனிங் டேபிள்' மீது ஒரு காகிதம் மடித்து வைக்கப்பட்டிருப்பது தெரிந்தது. அங்கேயே ஒரு நாற்காலியில் அமர்ந்து அதனைப் பிரித்தான்:

அன்புள்ள சங்கரன் அவர்களே!

இவ்வுலகத்தில் அன்பிற்காகவும் பாசத்துக்காகவும் நான் ஏங்கிய ஏக்கத்தைத் தணிக்க எனக்கு ஒரு ஜீவன் கிடைத்துவிட்டது. இன்று லேடி டாக்டரைச் சந்தித்தேன். எனது சந்தேகத்தை அவர் உறுதி செய்துவிட்டார். உங்கள் குழந்தைக்கு நான் தாயாகப் போகிறேன்.

எனக்கு வாழ்க்கையில் பற்றுதலும் அன்பு செலுத்த ஒரு ஜீவனும் ஆன இந்த உயிரை அளித்த உங்களுக்கு என் நன்றியை எப்படித் தெரிவிப்பது என்றே புரியவில்லை.

நீங்கள் விரும்பாத இந்தச் சங்கடத்திலிருந்து உங்களுக்கு நிம்மதி அளிப்பதுதான் நன்றி செலுத்துவதில் ஒரு பகுதியாவது ஆகும் என்றே நான் உங்களிடமிருந்து விடை பெறுகிறேன்.

என்றும் உங்களை மறவாத
பிரேமா

சங்கரனது கண்கள் பனித்திருந்தன.

'பிரேமா, இந்தச் சங்கரன் அவனல்ல; இவன் புதியவன்' என்று கத்த வேண்டும் போல் தோன்றியது.

அன்று இரவு அவனுடைய ஈரம் மிக்க நெஞ்சம் அமைதி அடைய வேண்டும் என்றால் பல தூக்க மாத்திரைகளின் உதவியை அவன் நாட வேண்டும்.

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி

நாற்பத்தேழாம் அத்தியாயம்

## சிறுத்தொண்டர்

பல்லவ வீரர்களில் சிலர் சந்தேகித்தது போல் சேனாதிபதி பரஞ்சோதியின் உடம்புக்கு ஒன்றுமில்லை. அவருடைய தேகம் சௌக்கியமாகத்தான் இருந்தது. ஆனால், அவருடைய மனத்திலேதான் சௌக்கியமும் இல்லை, சாந்தமும் இல்லை.

தம்முடைய கூடாரத்தில் தன்னந்தனியாகப் பரஞ்சோதி உட்கார்ந்திருந்தார். அவருக்குத் தூக்கம் வரவில்லை. அவருடைய மனக் கண் முன்னால் வாதாபியின் வீடுகள் பற்றி எரியும் காட்சியும். ஸ்திரீகளும், குழந்தைகளும், வயோதிகர்களும் அலறிக்கொண்டு ஓடும் தோற்றமும், பல்லவ வீரர்கள் வாதாபியின் எரிகிற வீடுகளிலும் கடைகளிலும் புகுந்து கொள்ளையடிக்கும் காட்சியும், தலை வேறு கை வேறு கால் வேறாகக் கிடந்த உயிரற்ற வீரர்களின் தோற்றமும், இரத்த வெள்ளம் ஓடும் காட்சியும் மாறி மாறி வந்து கொண்டிருந்தன.

இந்தக் கோரமான காட்சிகளோடு, இருளடைந்த பாதாள புத்தவிஹாரத்தில் சிவகாமியின் மீது விஷக் கத்தியை எறியப் போன நாகநந்தியின் தோற்றமும், விஷக் கத்தியைக் காட்டிலும் குரூரமான நஞ்சு தோய்ந்த சொல்லம்புகளை அந்தப் பேதைப் பெண் மீது மாமல்லர் பொழிந்த சம்பவமும், கத்தியால் குத்தப்பட்டுத் தரையிலே செத்துக் கிடந்த கண்ணபிரானுடைய களையிழந்த முகமும் இடையிடையே அவர் உள்ளத்தில் தோன்றின.

இவ்வளவுக்கும் மேலாக நெற்றியில் வெண்ணீறும் தேகமெல்லாம் ருத்ராட்ச மாலையும் அணிந்து கையிலே உழவாரப் படை தரித்துச் சாந்தமும் கருணையும் பொலிந்த திருமுகத்தோடு விளங்கிய திருநாவுக்கரசர் பெருமான் சேனாதிபதி பரஞ்சோதியை அன்புடன் நோக்கி, ''அப்பனே! நீ எங்கே இருக்கிறாய்? என்ன காரியம் செய்கிறாய்? போதும்! வா! உனக்காக எத்தனை நாள் நான் காத்துக் கொண்டிருப்பேன்?'' என்று கேட்டுக் கொண்டேயிருந்தார். அதற்குப் பரஞ்சோதி, ''குருதேவா! இன்னும் அறுபதுநாழிகை





நேரந்தான்! பிறகு தங்களிடம் வந்து விடுகிறேன்'' என்று மறுமொழி சொல்லிக் கொண்டிருந்தார்.

* * *

சிவகாமி தேவியை விடுதலை செய்து ஆயனரிடம் சேர்ப்பித்து அவர்களை முன்னதாக ஊருக்கும் அனுப்பி வைத்த பிறகு, பரஞ்சோதி பொறுக்கி எடுத்த வீரர்கள் அடங்கிய படையுடன் மேற்கு நோக்கிச் சென்றார். வேங்கியிலிருந்து வரும் சளுக்கர் சைனியத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஆதித்த வர்மருடன் சேர்ந்து கொண்டார். வாதாபி தகனம் ஆரம்பமான மூன்று நாளைக்கெல்லாம் வேங்கி சைனியம் வந்து சேர்ந்தது. அந்தச் சைனியம் பெரும்பாலும் யானைப் படையும் குதிரைப் படையும் அடங்கியது. மேற்படி சைனியத்தின் தலைவர்கள் புலிகேசியின் மரணத்தையும் வாதாபிக் கோட்டையின் வீழ்ச்சியையும் அறிந்து கொண்டதும் பின்னோக்கித் திரும்பிச் செல்லப் பார்த்தார்கள். பரஞ்சோதியின் முன் யோசனை அதற்கு இடம் கொடுக்கவில்லை. ஆதித்த வர்மரை நின்ற இடத்திலேயே நிற்கவிட்டுப் பரஞ்சோதி விரைந்து வளைந்து சென்று வேங்கி சைனியத்தைப் பின்னோக்கிச் செல்ல முடியாமல் தடுத்தார். இவ்விதம் இருபுறத்திலும் சூழப்பட்ட வேங்கி சைனியம் வேறு வழியின்றிச் சரணாகதி அடைந்தது. அந்தச் சைனியத்தைச் சேர்ந்த பதினாயிரம் யானைகளும் முப்பதினாயிரம் குதிரைகளும் ஒரு சேதமும் இல்லாமல் பல்லவர்களுக்குக் கிடைத்து விட்டன.

இந்த மாபெரும் காணிக்கையை மாமல்லரிடம் ஒப்புவித்ததும் பரஞ்சோதியார் தம்மைச் சேனாதிபதி பதவியிலிருந்து விடுதலை செய்யும்படி கேட்டுக் கொண்டார். இத்தனை காலமும் இராஜ்ய சேவை செய்தாகிவிட்டதென்றும், இனிமேல் சிவபெருமானுக்கு அடிமை பூண்டு சிவனடியார்களுக்குத் தொண்டு செய்து வாழ்க்கை நடத்த விரும்புவதாகவும் தெரிவித்துக் கொண்டார்.

மேற்படி வேண்டுகோள் மாமல்லருக்கு அதிகமான ஆச்சரியத்தை அளிக்கவில்லை. சென்ற சில காலமாகவே பரஞ்சோதியின் மனப் போக்கு மாறி வைராக்கியம் அடைந்து வருவதை மாமல்லர் கவனித்து வந்தார். எனவே, அவருடைய வேண்டுகோளை மறுக்காமல், ''சேனாதிபதி! தங்கள் இஷ்டப்படியே ஆகட்டும். ஆனால், எரிந்து



அழிந்த வாதாபியின் மத்தியில் நமது சிங்கக் கொடியை ஏற்றும் வைபவத்தை மட்டும் நடத்தி விடுங்கள். அப்புறம் விடை தருகிறேன்'' என்று சொல்லியிருந்தார்.

மேற்படி கொடியேற்று விழா மறுநாள் சூரியோதயத்தில் நடைபெறுவதாயிருந்தது. இதனாலேதான் பரஞ்சோதி: ''இன்னும் ஒரே நாள்'' என்று ஜபம் செய்து கொண்டிருந்தார்.

மறுதினம் காலையில் உதித்த சூரிய பகவான் சில நாளைக்கு முன்பு வாதாபி நகரம் இருந்த இடத்தில் — நேற்றெல்லாம் சாம்பலும் கரியும் கும்பல் கும்பலாகக் கிடந்த இடத்தில் — கண்ணைக் கவரும் அதிசயமான காட்சி ஒன்றைக் கண்டார்.

பல்லவ — பாண்டிய சேனா வீரர்கள் வாளும் வேலும் ஏந்தி வரிசை வரிசையாக அணிவகுத்து நின்றார்கள். அவர்களுக்குப் பின்னால் அழகாக அலங்கரிக்கப்பட்ட போர் யானைகளும் புரவிகளும் நிரை நிரையாகக் கண்ணுக்கெட்டிய தூரம் நின்றன. இந்தச் சேனா சமுத்திரத்துக்கு மத்தியில், அலைகடலுக்கு நடுவே தோன்றும் கப்பலின் கூம்பைப் போல் ஒரு புத்தம் புதிய சிற்ப வேலைப்பாடு அமைந்த ஜயஸ்தம்பம் கம்பீரமாக நின்றது.

இலட்சக்கணக்கான வீரர்கள் அவ்விடத்தில் கூடியிருந்த போதிலும், கப்சிப் என்று நிச்சப்தம் குடிகொண்டிருந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம்



கூட்டத்தின் ஒரு மூலையில் கலகலப்பு உண்டாயிற்று. பேரிகைகள் அதிர்ந்தன. எக்காளங்கள் முழங்கின. சக்கரவர்த்தியின் வருகைக்கு அறிகுறியான மேற்படி வாத்திய கோஷத்தைக் கேட்டதும், அந்த இலட்சக்கணக்கான வீரர்களின் கண்டங்களிலிருந்து ஏக காலத்தில், ''வாதாபி கொண்ட மாமல்ல சக்கரவர்த்தி வாழ்க!'' என்ற கோஷம் கிளம்பி மேலே வான் மண்டலம் வரை சென்று, நாலு திசையிலும் பரவிப் படர்ந்து, எங்கெங்கும் எதிரொலியை உண்டாக்கியது.

சேனாதிபதி பரஞ்சோதி, இலங்கை இளவரசர் மானவன்மர், வேங்கி அரசர் ஆதித்தவர்மர் முதலியவர்கள் பின்தொடர மாமல்ல சக்கரவர்த்தி ஜயஸ்தம்பத்தின் அடியிலே வந்து



நின்றவுடனே மறுபடியும் ஒரு தடவை ஜயகோஷம் கிளம்பி எட்டுத் திக்குகளையும் கிடுகிடுக்கச் செய்தது.

சத்தம் அடங்கியதும் மாமல்லர் சுற்றிலும் நின்றவர்களைப் பார்த்துச் சில விஷயங்களைக் கூறினார். தாமும் பரஞ்சோதியும் ஒன்பது வருஷத்துக்கு முன்னால் மாறுவேடம் பூண்டு அவர்கள் இப்போது நிற்கும் அதே இடத்துக்கு வந்திருந்ததையும், அச்சமயம் அங்கு வேறொரு ஜயஸ்தம்பம் நின்றதையும், அதில் புலிகேசி மகேந்திர பல்லவரை முறியடித்தது பற்றிய பொய்யான விவரம் எழுதியிருந்ததையும், அந்த ஜயஸ்தம்பத்தைப் பெயர்த்தெறிந்து அதன் இடத்தில் பல்லவ ஜயஸ்தம்பத்தை நிலைநாட்டுவது என்று தாமும் சேனாதிபதியும் சபதம் செய்ததையும், அந்தச் சபதம் இன்று நிறைவேறிவிட்டதையும் குறிப்பிட்டு, இந்த மாபெரும் வெற்றிக்கெல்லாம் முக்கிய காரண புருஷரான சேனாதிபதி பரஞ்சோதிதான் அந்த ஜய ஸ்தம்பத்தில் பல்லவ சைனியத்தின் வெற்றிக் கொடியை ஏற்றுவதற்கு உரிமை உடையவர் என்று கூறி முடித்தார்.

சக்கரவர்த்திக்கும் சேனாதிபதிக்கும் ஏதாவது மன வேற்றுமை ஏற்பட்டிருக்கிறதோ என்பது பற்றிப் பல்லவ வீரர்களிடையில் சந்தேகம் ஏற்பட்டிருந்ததைப் பார்த்தோம் அல்லவா?

எனவே, இப்போது ஜயஸ்தம்பத்தின் அருகில் சக்கரவர்த்தியும் சேனாதிபதியும் சேர்ந்து நிற்பதைப் பார்த்ததுமே அவ்வீரர்களுக்கு மிகுந்த உற்சாகம் ஏற்பட்டது. சேனாதிபதியைப் பற்றிச் சக்கரவர்த்தி கூறியதை அருகிலே நின்று நன்குக் கேட்டவர்களோ அளவற்ற மகிழ்ச்சியடைந்து ஆரவாரம் செய்தார்கள்.

சேனாதிபதி புதிய ஜயஸ்தம்பத்தின் மீது பல்லவ சிம்மக் கொடியை உயர்த்திய போது, சேனா வீரர்களின் குதூகலம் வரம்பு கடந்து பொங்கி ஜய கோஷமாகவும் வாழ்த்துரைகளாகவும் வெளியாயிற்று. பேரிகை முழக்கங்களும், வாத்திய கோஷங்களும், இலட்சக் கணக்கான கண்டங்களிலிருந்து கிளம்பிய ஜயத்வனிகளும் அவற்றின் பிரதித்வனிகளுமாகச் சேர்ந்து சிறிது நேரம் காது செவிடுபடச் செய்தன.

சத்தம் அடங்கும் வரையில் பொறுத்திருந்த மாமல்லர் கடைசியாக அன்று அவ்வீரர்களிடம் விடைபெறுவதற்கு முன்பு வருத்தமான விஷயத்தைத் தாம் தெரிவிக்க வேண்டியிருக்கிறது என்ற பூர்வ பீடிகையுடன் ஆரம்பித்து, இத்தனை காலம் தம்முடன் இருந்து இரவு பகல் சேவை புரிந்து இந்த மகத்தான வெற்றியைப் பெற்றுக் கொடுத்த பரஞ்சோதியார் இப்போது தம்மிடம் விடுதலை கேட்கிறார் என்றும், அவருடைய உள்ளம் சிவபக்தியில் ஈடுபட்டிருக்கிறது என்றும் சிவனடியாரைச் சேனைத் தலைவராக வைத்திருப்பது பெருங் குற்றமாகும் என்றும், ஆகையால் அவருக்கு விடுதலை கொடுத்து விடத் தாம் சம்மதித்துவிட்டதாயும், நாளைக் காலையில் அவர் தம்மையும் பல்லவ சைனியத்தையும் பிரிந்து தனி வழியே தீர்த்த யாத்திரை செல்கிறார் என்றும், வீரர்கள் எல்லாரும் உற்சாகமாக அவருக்கு விடை கொடுத்து அனுப்ப வேண்டும் என்றும் தெரிவித்தார். தாம் தெரிவித்த விஷயம் அவ்

விரிந்த சிறகுடனே
விரைந்தெழும் பறவைபோல்
விண் மீனைப் பறித்துவரும்
விசித்திரக் கண்ணோட்டம்
வீசுவது டெரிகோலா சேலையடி.



வளவாக அந்த வீரர் கூட்டத்தில் உற்சாகம் உண்டு பண்ணவில்லை என்பதையும் கண்டார். எல்லையற்ற மௌனம் அந்தப் பெருங் கூட்டத்தில் அப்போது குடிகொண்டிருந்தது. அடுத்த நிமிஷம், ஆஜானுபாகுவாய் நெடிதுயர்ந்திருந்த மாமல்ல சக்கரவர்த்தி தம்மைவிடக் குட்டையான சேனாதிபதி பரஞ்சோதியை மார்புறத் தழுவிக்கொண்ட போது, மீண்டும் அந்தச் சேனா சமுத்திரத்தில் கோலாகல த்வனிகள் எழுந்தன.

அன்றைக்கெல்லாம் மாமல்லர் பல்லவ — பாண்டிய வீரர்களுக்கும் படைத் தலைவர்களுக்கும் பரிசுகள் வழங்குவதில் ஈடுபட்டிருந்தார். வாதாபி எரியத் தொடங்கிய நாளிலிருந்து பல்லவ சைனியத்துடன் வந்திருந்த நூறு பொற்கொல்லர்கள் ஆயிரம் வீரர்களின் உதவியுடன் தங்கத்தை உருக்கிப் புதிய சிங்க முத்திரை போட்ட பொற்காசுகள் தயாரிப்பதில் ஈடுபட்டிருந்தார்கள். வாதாபி அரண்மனைகளிலிருந்தும் சளுக்க சாம்ராஜ்ய பொக்கிஷங்களிலிருந்தும் கைப்பற்றிய ஏராளமான தங்கக் கட்டிகளையும் பொன்னாபரணங்களையும் பெரிய கொப்பரைகளில் போட்டுப் பிரம்மாண்டமான அடுப்புக்களில் தீ மூட்டி உருக்கினார்கள். உருக்கிய பொன்னை நாணய வார்ப்படத்துக்காக அமைக்கப்பட்ட அச்சுக்களிலே ஊற்றி எடுத்து, இலட்சம் இலட்சமாகக் கழஞ்சு நாணயங்களைச் செய்து குவித்துக் கொண்டிருந்தார்கள்.

ஒவ்வொரு பல்லவ — பாண்டிய வீரனுக்கும் அவனவன் தானே சேகரித்துக் கொண்ட செல்வத்தைத் தவிர, தலைக்குப் பத்துப் பொற் கழஞ்சுகள் அளிக்கப்பட்டன.

போர்வீரர்களுக்கு மேற்கண்டவாறு பரிசு அளித்த பிறகு படைத் தலைவர்களுக்கும் சிறந்த வீரச் செயல்கள் புரிந்தவர்களுக்கும் விசேஷப் பரிசுகள் அளிக்கப்பட்டன. யானைகளும் குதிரைகளும் சுமக்கக் கூடிய அளவு செல்வங்களும் பகிர்ந்து கொடுக்கப்பட்டன.

துங்கபத்திரைக்கும் கிருஷ்ணை நதிக்கும் அப்பால் பல்லவ ஆதிக்கத்துக்குட்பட்ட விஸ்தாரமான பிரதேசங்களையெல்லாம் வேங்கியைத் தலைநகராக்கிக் கொண்டு சர்வாதிகாரத்துடன் ஆளும் படியாக ஆதித்தவர்மர் நியமிக்கப்பட்டார்.

இலங்கை இளவரசன் மானமவன்மருக்குத் தக்க வெகுமதி அளிப்பது பற்றி மாமல்லர் யோசித்த போது, ''பிரபு! என் தந்தை வீற்றிருந்து அரசாண்ட இலங்கை சிம்மாசனந்தான் நான் வேண்டும் பரிசு; வேறு எதுவும் வேண்டாம்!'' என்றார் மானவன்மர்.

கடைசியில், மாமல்லர் பரஞ்சோதியைப் பார்த்துச் சொன்னார்: ''நண்பரே! இந்த மகத்தான வெற்றி முழுவதும் தங்களுடையது; எனவே, இந்த வெற்றியின் மூலம் கிடைத்த அளவில்லாத செல்வங்களும் உங்களுடையவைதான். முப்பதினாயிரம் யானைகள், அறுபதினாயிரம் குதிரைகள், காஞ்சி அரண்மனைகள் எல்லாம் கொள்ளாத அளவு நவரத்தினங்கள், அளவிடமுடியாத தங்கம் வெள்ளி ஆபரணங்கள் இவையெல்லாம் நமக்கு இந்தப் போரிலே லாபமாகக் கிடைத்திருக்கின்றன. இவற்றில் ஒரு பகுதியை



யாவது தாங்கள் கட்டாயம் எடுத்துக் கொள்ள வேண்டும். ஐயாயிரம் யானைகளும், பதினாயிரம் குதிரைகளும், அவை சுமக்கக் கூடிய அளவு செல்வங்களும் தங்களுக்கு அளிப்பதென்று எண்ணியிருக்கிறேன்.''

மாமல்லரை மேலே பேச விடாதபடி தடுத்துப் பரஞ்சோதி கூறினார்: ''பல்லவேந்திரா! மன்னிக்க வேண்டும். தங்களிடம் நான் கோருவது முக்கியமாகத் தங்களுடைய தங்கமான இருதயத்தில் என்றைக்கும் ஒரு சிறு இடந்தான். அதற்கு மேலே நான் கோருகிற பரிசு ஒன்றே ஒன்று இருக்கிறது. அதுவும் வாதாபிக் கோட்டையிலிருந்து கொண்டுவரப்பட்ட பொருளே தான்!''

''ஆகா! அது என்ன அதிசயப் பொருள்?'' என்று மாமல்லர் வியப்புடன் கேட்டார்.

''அந்தப் பொருள் இதோ வரும் மூடு பல்லக்கிலே இருக்கிறது!'' என்று



ஜூடோ, கராத்தே இவைகளுக்கு அர்த்தம் என்ன தெரியுமா?

ஜப்பானிய மொழியில் 'ஜூடோ' என்றால் 'அமைதியான வழி' என்றும் 'கராத்தே' என்றால் 'வெறுங் கை' என்றும் பொருள்.

- எஸ்கொயர் — பாபு

பரஞ்சோதி கூறியதும், நாலு வீரர்கள் ஒரு மூடு பல்லக்கைக் கொண்டு வந்து இறக்கினார்கள். பல்லக்கைத் திறந்ததும், அதற்குள்ளே நாம் ஏற்கனவே பார்த்த விநாயகர் விக்கிரகம் இருந்தது.

வாதாபிக் கோட்டை வாசலில் இருந்த அந்த விக்கிரகத்துக்குத் தாம் பிரார்த்தனை செய்து கொண்டதைப் பற்றிப் பரஞ்சோதி கூறி, அதைத் தம்முடன் கொண்டு போய்த் தாம் பிறந்து வளர்ந்த செங்காட்டாங்குடிக் கிராமத்தில் பிரதிஷ்டை செய்ய விரும்புவதாகவும் தெரிவித்தார். மேற்படி விக்கிரகத்தைத் தவிர வாதாபி நகரத்திலிருந்து கவரப்பட்ட வேறெந்தப் பொருளும் தமக்கு வேண்டியதில்லை என்று பரஞ்சோதி கண்டிப்பாக மறுத்துவிட்டார்.

வேறு வழியின்றி மாமல்லர் பரஞ்சோதியின் விருப்பத்துக்கு இணங்க வேண்டியதாயிற்று. பரஞ்சோதி ஸ்தல யாத்திரை செல்லும்போது இரண்டு யானைகள், பன்னிரண்டு குதிரைகள், நூறு காலாள் வீரர்கள் ஆகிய பரிவாரங்களை மட்டும் உடன் அழைத்துச் செல்ல வேண்டும் என்று மாமல்லர் பிடிவாதம் பிடித்துத் தமது நண்பரை இசைக்கும்படி செய்தார்.

மறு நாள் மத்தியான்னம் மாமல்லரும் பல்லவ சைனியமும் அவர்கள் வந்த வழியே காஞ்சிக்குத் திரும்பிச் செல்லப் புறப்படுவதாகத் திட்டமாகியிருந்தது. பரஞ்சோதியார் துங்கபத்திரைக் கரையோடு சென்று ஸ்ரீசைலம் முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசித்துவிட்டு வருவதற்காக அன்று காலையிலேயே தம் சிறு பரிவாரத்துடன் புறப்பட்டார்.

புறப்படுவதற்கு முன்னால் மாமல்லரிடம் கடைசியாக விடைபெற்றுக் கொள்ளுவதற்காகச் சக்கரவர்த்தியின் கூடாரத்துக்குப் பரஞ்சோதி வந்தபோது பல்லவ — பாண்டிய வீரர்கள் தங்களுடைய கட்டுப்பாட்டையெல்லாம் மறந்து அங்கே கூட்டம் கூடிவிட்டார்கள். பரஞ்சோதியின் புதிய தோற்றம் அவர்களைச் சிறிது நேரம் திகைப்படையச் செய்தது. கத்தி, கேடயம், வாள், வேல், தலைப்பாகை, கவசம், அங்கி இவற்றையெல்லாம் களைந்தெறிந்துவிட்டுப் பரஞ்சோதி நெற்றியில் வெண்ணீறு தரித்து, தலையிலும், கழுத்திலும் ருத்ராட்சம் அணிந்து பழுத்த சிவபக்தரின் தோற்றத்தில் விளங்கினார். அவருடைய திருமுகம் நேற்று வரை இல்லாத பொலிவுடன் சுடர்விட்டுப் பிரகாசித்தது. சற்று நேரம் திகைத்து நின்ற வீரர்களைப் பார்த்துப் பரஞ்சோதி கும்பிட்டதும், "சேனாதிபதி பரஞ்சோதி வாழ்க! வாதாபி கொண்ட மகாவீரர் வாழ்க!" என்று கூவினார்கள். பரஞ்சோதி அவர்களைக் கை கூப்பி வணங்கி அமைதி உண்டு பண்ணினார். பிறகு, "நண்பர்களே! இன்று முதல் நான் சேனாதிபதி இல்லை; தளபதியும் இல்லை. சிவனடியார்களுக்குத் திருத்தொண்டு செய்யும் தொண்டர் கூட்டத்தில் அடியேன் ஒரு சிறு தொண்டன்!" என்று கூறினார்.

அளவில்லாத வியப்புடனும் பக்தியுடனும் அதைக் கேட்டுக் கொண்டு நின்ற பல்லவ வீரர்களில் ஒருவன் அப்போது ஓர் அமர கோஷத்தைக் கிளப்பினான்:

"சிவனடியார் சிறுத் தொண்டர் வாழ்க!" என்று அவன் கம்பீரமாகக் கிளப்பிய கோஷத்தை நூறு நூறு குரல்கள் திருப்பிக் கூவின. "சிறுத் தொண்டர் வாழ்க! சிவனடியார் சிறுத் தொண்டர் வாழ்க!" என்ற கோஷம் நாற்புறத்திலும் பரவி ஆயிரமாயிரம் குரல்களில் ஒலித்து எதிரொலித்தது. பரஞ்சோதியார் தம் சிறிய பரிவாரத்துடனும் வாதாபி விநாயகருடனும் நெடுந்தூரம் சென்று கண்ணுக்கு மறையும் வரையில், "சிறுத்தொண்டர் வாழ்க!" என்ற சிரஞ்சீவி கோஷம் அந்தச் சேனா சமுத்திரத்தில் திரும்பத் திரும்ப எழுந்து கொண்டேயிருந்தது! (தொடரும்)



நம்ப முடியாவிட்டாலும் உண்மை இதுதான். வேகமாகச் சாப்பிடுகின்றவர்கள் நிறையச் சாப்பிடுவார்கள். சுவைத்து, மெதுவாகச் சாப்பிடுபவர்கள் கொஞ்சமாகச் சாப்பிடுகிறார்கள். உடல் இளைக்க வேண்டுமானால் மெதுவாகச் சாப்பிட வேண்டும்.

- எஸ்கொயர் — பாபு

# அகத்தில் இளமை இருக்கையிலே...

...முகத்திலே அது மலரட்டுமே.

மலரட்டுமே மாந்தளிர் மேனியிலே மாசில்லா இளமையழகு
மலரட்டுமே பாண்ட்ஸ் கோல்டு க்ரீம் துணையோடு.
உங்கள் மேனியழகுக்குத் தேவைப்படும் குழைவான
இயற்கைத் தைலங்கள் யாவும் இணைந்த கலவை இதுவே.
உள்ளிறங்கத் தேய்த்து சருமத்திற்கு ஊட்டமளியுங்கள்.
குளிர் வாடைக் காற்றின் கொடுமையிலிருந்து
காத்திடுங்கள் உங்கள் மேனியை.




## இளமை திகழும் மேனி என்றும் உமக்கே.

# பாண்ட்ஸ் கோல்டு க்ரீம்

சீஸ்பரோ பாண்ட்ஸ் இன்க் (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் அமெரிக்காவில் இணைக்கப்பட்டது).

லின்டாஸ்-CPCA-140TH

# பொன்னியின் புதல்வர்



சுந்தா

## 12. பகுத்தறிவுவாதிகள்

> எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பதறிவு
>
> - திருவள்ளுவர்

பொன்னி நாட்டுத் திருச்செங்காட்டாங்குடி என்னும் கிராமத்தில் கோயில் கொண்டுள்ளார் வாதாபி கணபதி. அவருடைய உருவச் சித்திரம் 1946 ஜூன் 23ம் தேதிய கல்கி இதழின் அட்டையை அலங்கரித்தது. ஓவியர் சந்திரா நேரில் பார்த்து வரைந்தது அது. அந்தச் சித்திரம் வெளியான அதே இதழில்தான் ''சிவகாமியின் சபதம்'' தொடர் கதையின் ''சிறுத் தொண்டர்'' அத்தியாயம் வந்தது. இரண்டுக்கும் உள்ள பொருத்தம் இந்த வரலாற்று நாவலைப் படித்தவர்களுக்குத் தெரியும்.

திருச்செங்காட்டாங்குடியில் பிறந்த பரஞ்சோதி, கல்வியை நாடிக் காஞ்சிக்குப் போவது, ''சிவகாமியின் சபதம்'' நாவலின் தொடக்கத்தில் வரும் நிகழ்ச்சி; வாதாபியை வென்று, அந்நகரிலிருந்த கணபதி விக்கிரகத்தைத் தமது ஊரில் கோவில் கொள்ளச் செய்வதற்காக உடைமைகொண்டு சிறுத்தொண்டராய் மாறிய பரஞ்சோதி பயணமாவது, இறுதிக் கட்டத்தில் வரும் நிகழ்ச்சி. இரண்டுக்கும் இடையே, வரலாற்று உண்மையைக் கொண்டு இழைத்த ஒரு வண்ணக் கோலம் வளைந்தும் நெளிந்தும் ஓடிக் கருத்தைச் சொக்க வைக்கிறது.

வாதாபி கணபதியைப் போல் எங்ஙனிலாக் கணபதிகள், எத்தனையோ வடிவ மாற்றங்களுடன், தமிழ்நாடு நெடுகிலும் சிறிதும் பெரிதுமான கோயில்களில் காட்சி தருகிறார்கள். அவர்களைப் பற்றி யெல்லாம் வரலாற்றுக் கதைகள், புராணக் கதைகள், நவீனக் கதைகள் என்று எத்தனையோ உண்டு. அவற்றுடன் இன்னும் ஒன்றாகப் ''புதிய விநாயக புராணம்'' எழுதியிருக்கிறார் கல்கி.

முன்னொரு காலத்தில் துர்வாச முனிவர் கைலாசத்துக்குச் சென்றபோது, முன் வாசலில் வீற்றிருந்த விநாயகப் பெருமானைக் கவனியாமல் விடுவிடு என்று உள்ளே போய் விட்டார். அதைக் கண்ட விநாயகர் ஒரு வேடிக்கை செய்ய எண்ணித் தம் தும்பிக் கையை நீட்டித் துர்வாச முனிவரின் முதுகின் பேரில் தீர்க்க சுவாசம் ஒன்று விட்டார். உடனே துர்வாச முனிவர் அலறிப் புடைத்துக் கொண்டு தலை குப்புற விழ, அதைக் கண்டு பூத கணங்கள் எல்லாம் சிரித்தன.

துர்வாச முனிவர் மீண்டும் எழுந்து தமக்கு என்ன நேர்ந்தது என்பதை ஞான திருஷ்டி விஜல் அறிந்து கொண்டதும், கோபம் அவருடைய ஜடா மகுடத்துக்கு மேலே போய் விட்டது. விநாயகரைப் பார்த்து, ''நீர் பூலோகத்தில் நாற்சந்திகளிலும் குளத்தங்கரை மரத்தடியிலும் கேட்பாரற்று வெய்யிலில் காய்ந்து கொண்டும், மழையில் நனைந்து கொண்டும் இருப்பீராக! உமக்குத் தோப்புக் கரணம் போடுவோரும், வேண்டுதல் செய்து கொண்டு தேங்காய் உடைப்போரும் கொழுக்கட்டை நைவேத்தியம் செய்வோரும் நாளுக்கு நாள் குறைந்து போவார்களாக!'' என்று சாபம் கொடுத்துவிட்டுப் பூத கணங்களை நோக்கித் திரும்பினார். ''நான் விழுந்த போது சிரித்தவர்கள் அத்தனை பேரும் பூலோகத்தில் நாத்திகர்களாகப் பிறக்கக் கடவீர்களாக!'' என்று சபித்தார். பூத கணங்கள் நடுநடுங்கிப் போய் முனிவரின் அடிகளில் விழுந்து வணங்கி, ''முனிபுங்கவரே! தாங்கள் மூக்குக்கு மேலே முன்கோபம் உடையவர் என்று தெரிந்திருந்தும், நாங்கள் சிரித்தது என்னவோ குற்றம்தான்! கருணை கூர்ந்து மன்னித்துச் சாப விமோசனத்துக்கு வழி கூற வேண்டும்!'' என்று கேட்டுக் கொண்டனர்.

விநாயகரும், ''துர்வாசரே! உமக்குப் பசி எடுத்துக் கோபம் பொங்கி வந்தபோதெல்லாம் பல தடவை நானாகவே உம்மை அழைத்து, மோதகம், நாவிகிரம் ஆகியவற்றில் பங்கு கொடுத்திருந்தும், ஒரு சிறிய வேடிக்கை செய்ததற்காக இப்படிச் சாபம் கொடுத்துவிட்டீரே? எனக்கு ஒருவரும் பூஜை நைவேத்தியம் செய்யாமல் போனால் உம்முடைய கதி என்ன ஆவது?'' என்று கேட்டார். அவ்வளவுதான்; துர்வாச முனிவரின் கோபம் பறந்து போய் விட்டது.

''ஆமாம்; சற்று அவசரப்பட்டுத்தான் சாபம் கொடுத்து விட்டேன். ஆயினும் பரவாயில்லை. உலகில் நாஸ்திகர்களாய்ப் பிறக்கப் போகும் இந்தப் பூத கணங்கள் ஒரு நாள் ''மண் பிள்ளையார் செய்து உடைக்கப் போகிறோம்'' என்று கிளம்பி, அவ்விதமே சில இடங்களில் செய்யவும் செய்வார்கள். உடனே ஆஸ்திக மகாஜனங்களும் பக்த கோடிகளும் விழித்துக் கொள்வார்கள். முன்னைக் காட்டிலும் விநாயகக் கடவுளாகிய தங்களிடம் அதிக பக்தி கொள்வார்கள். அர்ச்சனைகள், அபிஷேகங்கள், நைவேத்தியங்கள், ஆரத்திகள், வீதி வலங்கள், உற்சவங்கள் எல்லாம் பதின்மடங்கு அதிகமாகவும் அமோகமாகவும் நடத்துவார்கள். அந்தச் சமயத்தில் மட்டும் என்னை மறந்துவிட வேண்டாம்!'' என்று முனிவர் கூறினார்.

துர்வாச முனிவரின் வாக்கின்படியே பூலோகத்தில் பரத கண்டத்தின் தென் பகுதியில் கலியுகம் விஜய வருடம் வைகாசி மாதத்தில், எல்லாம் நடந்தது....

அதாவது கிறிஸ்து சகாப்தப்படி 1953 மே — ஜூன் மாதங்களில். பிந்தைய மாதம் 14ம் தேதியக் கல்கி இதழின் தலையங்கத்தில் வந்ததுதான் இந்தப் புதிய புராணக் கதை.

என்ன நடந்தது என்றால்—

கடவுள் நம்பிக்கையைக் குலைப்பதற்கான ஒரு நேர் நடவடிக்கையாகப் பிள்ளையார் உடைப்புத் திட்டம் ஒன்றைத் திராவிடக் கழகத்தின் தலைவர் ராமசாமிப் பெரியார் அறிவித்தார். தமிழர்களில் மிகப் பெரும்பாலோர் வழிபடும் தெய்வம் என்பதே பிள்ளையாரை அவர் குறியாகக் கொண்டதற்குக் காரணம் எனலாம்.

அந்தத் திட்டத்தின்படியே சில ஊர்களில் சில நாத்திகர்கள், அவர் அதற்கெனக் குறிப்பிட்ட மே மாதம் 27ம் தேதியன்று பிள்ளையார் உருவங்கள் செய்து உடைத்தார்கள். பெரிதாக ஒன்றும் நடக்கவில்லைதான். ஆனால் அதன் மூலம் தோன்றிய எதிர்ப்பும் விளைவும் பெரிதாக இருந்தன. எவ்வளவு பெரிது, எப்படி என்பதை அதே தலையங்கத்தின் தொடர்ச்சியிலிருந்து காணலாம்:

பல்லவ சேநாதிபதி பரஞ்சோதியார் வடக்கே படையெடுத்துச் சென்று வாதாபி நகரை எரித்து அழித்த பிறகு, அங்கிருந்து வாதாபி கணபதியை வெற்றி முழக்கத்துடன் ஊர்வலமாக எடுத்து வந்து தமிழ் நாட்டில் நிலைநாட்டினார் அல்லவா? அந்தக் காலத்தில் தமிழ் மக்கள் விநாயகர் விஷயத்தில் காட்டிய பக்தி வெறியை இத்தனை நூற்றாண்டுகளுக்குப் பிறகு இன்று மறுபடியும் தமிழ்நாட்டில் கண்டோம். மூலை முடுக்குகளிலும், சந்து பொந்துகளிலும், இடிந்த கோயில்களிலும், குளத்தங்கரை ஆற்றங்கரைகளிலும் வீற்றிருந்த விநாயகர்களுக்கெல்லாம் யோகம்பிறந்தது. அபிஷேக அர்ச்சனைகளும் உற்சவ ஊர்வலங்களும் அமோகமாக நடைபெற்றன. அறுவகைச் சமயங்களில் ஒன்றான ''காணபத்தியம்'' என்னும் சமயமே புத்துயிர் பெற்றுவிட்டதாகத் தோன்றுகிறது.

இத்துடன் கல்கி நிறுத்திக் கொள்ளாமல், ஓரமின்றி இன்னொன்றையும் சுட்டிக் காட்டினார்:

உண்மையான ஆத்திகர்கள் அவ்வளவாக மகிழ்ச்சி கொள்ள முடியாத, ஏன், வருத்தமே

○ ''கடவுள் உண்டு என்று சொல்ல எனக்கு எப்படி உரிமை கோருகிறேனோ அப்படியே கடவுள் இல்லை என்று வாதிக்கப் பிறருக்கு உரிமை கொடுக்க விரும்புகிறேன்''—கல்கி. ○ ''வேலைக்காரி'' என்பது படத்தின் பெயரானாலும் அதற்கான தமது விமர்சனத்துக்கு ''காளியின் உடுக்கை'' என்று தலைப்புக் கொடுத்தார் கல்கி. ○ ''மனோகரன் ராஜசபையில் பேசும் பேச்சைச் சொற் பிரவாகம், சொல் வெள்ளம், சொல் பிரளயம், சொல் சண்டமாருதம் என்றெல்லாம் சொன்னாலும் திருப்தி உண்டாகவில்லை.''—கல்கி. ○ ''நல்ல டெக்னிக்கை விரும்புகிறவர்கள் வேறு படங்களைப் பார்க்கப் போங்கள்; நல்ல லட்சியம் நல்ல சிரிப்பு இவற்றை விரும்புகிறவர்கள் 'நல்லதம்பி' படத்தைப் பாருங்கள்!''—கல்கி.









கொள்ளத்தக்க சில நிகழ்ச்சிகளும் நடைபெற்றதை இங்கே குறிப்பிட வேண்டியிருக்கிறது. திராவிடர் கழகத் தலைவரின் உருவப் படங்களைக் கொளுத்துதல், அவரைப் போல் பொம்மைகளைச் செய்து உடைத்தல், கொடும்பாவி கட்டி இழுத்தல் போன்ற செயல்கள் ஆஸ்திகத் தன்மைக்குச் சிறிதும் பொருந்தாத அநாகரிகமான காரியங்கள். ''அன்பே சிவம்'' என்பது திருமூலரின் அருள் வாக்கு. • ''அன்பே கடவுள்'' என்னும் கருத்தை ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு விதத்தில் வலியுறுத்தி இருக்கிறது... ஆகையால் அன்பு நெறிக்கு மாறான செயல் எதுவும் ஆஸ்திகம் ஆக முடியாது. வாயினால் மட்டும் ஆஸ்திகம் பேசிக் கொண்டு உள்ளத்தில் நீசத்தனமான துவேஷத்தை நிரப்பி வைத்துக்கொண்டிருப்பவர்கள்தான், நாஸ்திகர்கள் மீது பழிக்குப் பழி வாங்க நினைத்து மேற்கூறியவை போன்ற செயல்கள் புரிவார்கள்.

உண்மை ஆஸ்திகர்களுக்கு நாஸ்திகத்தின் மீது வெறுப்பு இருக்கலாம்; ஆனால் நாஸ்திகர்கள் மீது வெறுப்பு இருக்கக் கூடாது.

நாத்திகப் பிரசாரம் மிகுந்திருந்த காலம் அது. அந்தப் பிரசாரத்தை நடத்தியவர்கள் அப்போது நேர்முகமாய் அரசியலில் ஈடுபட்டிருக்கவில்லை யாதலால், அது ஒன்றிலேயே தீவிரமாய் இருந்தார்கள். முதலில் அந்தப் பிரசாரம் ஏடுகள் மூலமும் பேச்சு மேடைகளிலிருந்தும் நடந்தது; பின்னர் நாடக அரங்குகளிலிருந்தும் வெள்ளித் திரையிலிருந்தும் நடக்கலாயிற்று. நாளுக்கு நாள் அதிகமாய் அளாவலும் ஆற்றலும் கொண்டதாய்ப் பரவிய அந்தப் பிரசாரம் பற்றி, அடிக்கடி தமது கருத்தை வெளியிட்டார் கல்கி. எப்படி வெளியிட்டார் என்றால், எதிருக்குப் புதிராகவோ, ஏட்டிக்குப் போட்டியாகவோ அல்ல:

''கடவுளைக் குறித்து உம்முடைய கருத்தை இன்னும் கொஞ்சம் விஸ்தரிக்க முடியுமா?'' என்று சில நேயர்கள் கேட்டிருக்கிறார்கள். ''நாஸ்திகப் பிரசாரத்தைப் பற்றி உமக்குக் கவலை இல்லையா? ஹிந்து மதத்தைத் தூஷிப்பவர்களைக் குறித்து நடவடிக்கை எடுக்க வேண்டாமா?'' என்று வேறு சில நேயர்கள் கேட்டிருக்கிறார்கள்.

நல்லது. கடவுளைப் பற்றி என்னுடைய கருத்தை விஸ்தரிப்பதில் எனக்கு ஆட்சேபம் இல்லை; கடவுளுக்கும் ஆட்சேபம் இராது. கடவுள் ஒருவர் உண்டு என்பதை நான் நம்புகிறேன். ஆனால் கடவுள் இல்லை என்று வாதிப்பவர்களிடத்தில் எனக்குக் கோபம் கிடையாது. கடவுள் உண்டு என்று சொல்லவும் பிரசாரம் செய்யவும் எனக்கு எப்படி உரிமை கோருகிறேனோ, அப்படியே கடவுள் இல்லை என்று வாதிக்கவும் பிரசாரம் செய்யவும் பிறருக்கு உரிமை கொடுக்க விரும்புகிறேன்...

ஆனால் நாத்திகர்களோ, திராவிடக் கழகத்தாரோ, மற்றவர்களோ, பிரசாரத்தோடு நில்லாமல், பலாத்காரத்தைக் கையாளத் தொடங்கும்போது அது நாட்டுக்கும் சமூகத்துக்கும் எதிரான குற்றமாகிறது. கோயிலுக்குப் போக வேண்டாம் என்று பிரசாரம் செய்யட்டும்; அதற்குக் காரணங்களை எடுத்துச் சொல்லட்டும்; எழுதட்டும். ஆனால் கோயிலுக்குப் போகிறவர்கள் மீது கல்லைப் போடும்படி சொன்னாலும், கோயிலுக்குள்ளே வந்து பக்தர்கள் மனம் புண்படும்படி நடந்துகொண்டாலும் அங்கே சர்க்கார் தலையிட்டே ஆக வேண்டும். பூணூலையும் உச்சிக் குடுமியையும் நாமத்தையும் திருநீற்றையும் சந்தனப் பொட்டையும் பற்றிப் பேச்சிலும் எழுத்திலும் சக்கைப் போடு போடட்டும். ஆனால் வைதிக நம்பிக்கையுள்ள ஓர் ஏழைப் பிராமணனின் பூணூலை அறுக்கவோ, ஒரு பக்தரின் நாமத்தையும் விபூதியையும் அழிக்கவோ யாரேனும் முற்பட்டால் அதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்கும் சர்க்கார் சர்க்காரே அல்ல. அத்தகைய சர்க்காரை நடத்தும் மந்திரிகள் கல்லைக் கட்டிக்கொண்டு கடலில் விழுந்து விடலாம்.

(கல்கி இதழ் 19-6-49)

பின்னொரு சமயம் ஓர் ஊரில், குறிப்பிட்ட ஒரு சாதியாரின் வீடுகளில் கயவர்கள் புகுந்து கொடுமைகள் செய்த போது, ''திருப்பித் தாக்குங்கள்!'' என்ற தலைப்புடன் ஒரு தலையங்கம் எழுதினார் கல்கி. அதில் அவர் ஆண்கள் மட்டுமின்றிப் பெண்களும் துணிச்சலுடன் தற்காப்புச் செய்து கொள்ள வேண்டும் என்றார்:

புருஷர்கள் எப்போதும் வீட்டிலேயே இருக்க மாட்டார்கள். அவரவர்களும் காரிய நிமித்தமாக வெளியே போவார்கள். அத்தகைய சமயங்களில் காலிகளும் கயவர்களும் தாக்க வந்தார்கள் என்றால், நம் சகோதரிகள் நாணத்தையும் அச்சத்தையும் மற்றப் பெண்மைக் குணங்களையும் ஒதுக்கி வைத்து விட்டுத் தாக்க வருகிறவர்களைத் திருப்பித் தாக்கத் தயாராக வேண்டும். கையிலே அகப்படும் அரிவாள்மணை, கடப்பாரை, உலக்கை, விளக்குமாறு முதலிய எல்லாவித ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு கயவர்களைத் திருப்பித்

---



**மலிவுச் சத்து!**

15 பைசாவுக்கு விற்கப்படும் கொய்யாப்பழத்தில் 75 பைசா ஆப்பிளைவிடப் பத்து மடங்கு சத்து இருக்கிறது. அதேபோல் இருபது பைசா வேர்க்கடலையில் பத்து ரூபாய்க்கு வாங்கும் வாதுமைப் பருப்பை விட இருபது மடங்கு சத்து இருக்கிறது.

- இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி - பாபு

# ஓல்ட் ஸ்பைஸ்
## ஆணின் வெற்றிக்கு அடிகோலுகிறது.

எழில்துள்ளும் பெருங்கடல்.
அழகுப் பொக்கிஷமாக
அவள் அருகிலிருக்க—
ஆம் அவன் ரசனைக்கு
சுருதி கூட்டுகிறது.
வழவழவென ஷேவ்.
குளுகுளுவென குளியல்,
எண்ணத்தைக் கிளர்ந்திடும்
எண்ணற்ற அலுவல்கள்.
இவற்றிற்கெல்லாம்
வேண்டிய உற்சாகம்
பொங்கும் புத்துணர்ச்சியை
அள்ளித்தரும்
ஓல்ட் ஸ்பைஸ்.

ஆண்களின் அழகுக்காக
ஓல்ட் ஸ்பைஸ் அளிக்கும்
அணிவரிசை:

- ஆஃப்டர் ஷேவ் லோஷன்*
- கொலோன்*
- லாதர் ஷேவிங் க்ரீம்*
- பிரஷ்லெஸ் ஷேவிங் க்ரீம்
- பாடி டால்க்*
- ஹேர் க்ரீம்
- பிரிலியண்டைன்.

# ஓல்ட் ஸ்பைஸ்
## ஆண்மையின் சின்னம்

*Old Spice*

**the mark of a man**







* எலுமிச்சை மணத்திலும் கிடைக்கின்றன.

இந்தியாவெங்கும் தேர்ந்தெடுக்கப்பட்ட கடைகளில் கிடைக்கின்றன. தயாரிப்பவர்கள்: கோல்ஃபாகஸ் லாபரட்டரீஸ் (இந்தியா) பிரைவேட். லிட்., மெனஸ்-ஷல்டன் எண்டர்ப்ரைஸ்.

OS 2/TAM




மானேஜர் : சரி, அந்த வேலையை உமக்குக் கொடுக்கிறேன். ஆனால் அது கொஞ்சம் தலைவேதனை பிடித்த வேலையாச்சேன்னு பார்க்கிறேன்.

வேலைக்கு வந்தவர் : வேதனை இல்லாமல் எப்படிச் சம்பளம் கிடைக்கும் ? சம்பளம் எப்ப வருங்க?

மானேஜர் : அதுதான் உம்முடைய முதல் வேதனை !

---

தாக்கித் தற்காப்புச் செய்து கொள்ள வேண்டும். (கல்கி இதழ் 2-8-53)

வெறுப்பை வளர்த்து வன்முறையை விளைவிக்காதவரையில் யாரும் எவ்விதப் பிரசாரமும் செய்யலாந்தான் என்ற கருத்தை, இதற்கு முன்பு பார்த்த வாக்கியங்களில் கல்கி வெளியிட்டார் என்பதை மீண்டும் எண்ணிப் பார்க்க வேண்டும். அந்த வாக்கியங்கள், ''வேலைக்காரி'' என்ற திரைப்படத்துக்கு அவர் எழுதிய விமரிசனத்தில் வந்தவை. சி. என். அண்ணாதுரை கதை வசனம் எழுதிய படம் அது. ''நாஸ்திகப் பிரசாரம் செய்கிற ஆட்சேபகரமான படம்'' என ஆஸ்திகர்கள் பலர் அதைக் கண்டனம் செய்து, அதைத் தடை செய்ய வேண்டும் என்று கோரிக்கை விடுத்தார்கள். அவர்களுடைய கோரிக்கைக்கு இணங்கலாமா வேண்டாமா என்பதைத் தீர்மானிப்பதற்காக மாகாண அமைச்சர்கள் இருவர், கல்கியை ஆலோசகராய்க் கொண்டு அந்தப் படத்தைப் பார்த்தார்கள்.

தடை செய்வதற்குரிய படம் அல்ல அது என்பதே கல்கி கூறிய ஆலோசனை. ''அது ஆட்சேபகரமான படமே அல்ல; தமிழ் நாட்டில் வெளிவந்துள்ள மிகச் சிறந்த படங்களுள் ஒன்று'' என்றார்.

பின்னர் அந்த மதிப்பீட்டைத் தமது விமரிசனத்தில் கல்கி விரிவுபடுத்தி வெளியிட்டு, படத்தில் அடங்கிய நல்ல கருத்துக்கள் சிலவற்றைக் குறிப்பிட்டார். அவற்றில் ஒன்று:

ஏழைகள் பணக்காரர்களிடம் படும் கொடுமையைப் பற்றி விவரிக்கும் கதை. கொடுமைக்கு ஆளான ஏழை மனிதன் பணக்காரனைப் பழிவாங்குகிறான். உண்மைக் காதலுக்கு சாதி வேற்றுமை இல்லை என்பது ஷூதாபிக்கப் படுகிறது. பணக்காரனுடைய பிள்ளை ஏழை வேலைக்காரியைக் காதலித்து மணக்கிறான். முடிவில் பணக்காரர்களின் கர்வம் ஒடுங்கி ஏழைகளின் கை ஓங்குகிறது.

''விஷயத்தின் சிறப்பினாலும், நடிப்புத் திறமையினாலும், பேச்சு சாமர்த்தியத்தினாலும், டெக்னிக்கினாலும் படம் சிறந்து விளங்குகிறது'' என்று பாராட்டியபின்னர், ஆட்சேபகரமானது என்று சொல்லப்பட்ட பகுதியைக் குறிப்பிட்டார்:

கதாநாயகன் காளி மாதாவிடம் பக்தி கொண்டிருந்தான். காளி கோயிலுக்குப் போய் வழிபட்டு வந்தான். அவனுடைய சிநேகிதன் மணி அதைக் குறித்து அவனைக் கேலி செய்து வந்தான்.

காளி பூஜையினால் கதாநாயகனின் கஷ்டம் தீரவில்லை. அவனுடைய தந்தையின் தற்கொலைக்குக் காரண புருஷரான பணக்கார வேதாசல முதலியாருக்கு ஒரு ஜமீன் கிராமம் கிடைக்கிறது. இதை அறிந்ததும் கதாநாயகனுடைய மனம் பதறுகிறது. காளி மாதாவிடம் வைத்த பக்தியும் நம்பிக்கையும் மறைந்துவிடுகின்றன. ''உன்னை வழிபட்டு என்ன பயன்!'' என்று அலறிவிட்டு, பூஜை சாமான்களில் சிலவற்றை உடைத்துத் தள்ளிவிட்டுக் கோயிலிலிருந்து வெளியேறுகிறான்.

இதை நாஸ்திகப் பிரசாரம் என்றும், ஹிந்து மதத்துக்கு விரோதமான பிரசாரம் என்றும் சொல்லக் கூடும். ஆனால் நாஸ்திகப் பிரசாரம் என்ற முறையில் இந்த முயற்சியை ஒரு பெரும் தோல்வி என்றே நான் கருதுகிறேன்.

கதாநாயகன் காளியைப் பார்த்துக் கேட்பதற்கெல்லாம் ஹிந்து மதத்தை அறிந்தவர்கள் அனைவருக்கும் பதில் தெரியும்—

''அரசன் அன்று கொல்லும்; தெய்வம் நின்று கொல்லும்.''

தெய்வம் கருணை புரிவதும் அப்படியே...

காளி கோயிலிலிருந்து கதாநாயகன் காளியை வைதுகொண்டே ஓடியபோது, காளி அவன் சிற்றறிவை எண்ணிச் சிரித்திருக்க வேண்டும்! ஏனெனில், அதே சமயத்தில் காளி அவனுடைய நன்மைக்காக

என்ன அற்புதங்களெல்லாம் செய்து வைத்திருக்கிறான், தெரியுமா?

கதையில் மேலே, எதிர்பாராத சம்பவங்களும், வியப்பான திருப்பங்களும், நம்பமுடியாத நிகழ்ச்சிகளும் வந்து, சுபமான முடிவுக்கு வழி செய்கின்றன இவற்றை ஒன்றன்பின் ஒன்றாகக் கல்கி எடுத்துச் சொல்லி, காளியின் கருணையினால்தான் ஒவ்வொன்றும் நிகழ்வதாகத் தோன்றுகிறது என்றார். ''காளி, பக்தனைப் பரிசோதிக்கும்போது பரிசோதிக்கிறாள். இனிமேல் சோதனையைத் தாங்க மாட்டான் என்று ஏற்பட்டதும் கருணை புரிந்து விடுகிறாள். உடனே நடவாத காரியமெல்லாம் நடந்து விடுகிறது!''

''வேலைக்காரி'' என்பது அந்தப் படத்தின் பெயராய் இருந்த போதிலும், அதற்கான தமது விமரிசனத்துக்குக் ''காளியின் கருணை'' என்றே தலைப்புக் கொடுத்தார் கல்கி.

இதே போலத்தான் வேறுபட்டதாய் ''நல்லதம்பி'' என்ற ஒரு படத்துக்கான தமது விமரிசனத்துக்கும், ''என் கடவுள்'' என்று அவர் மகுடம் கொடுத்திருந்தார். என். எஸ். கிருஷ்ணன் எடுத்ததும் நடித்ததுமான அந்தப் படமும் ஆஸ்திகர்களின் கண்டனத்துக்கும் தடை செய்ய வேண்டும் என்ற கோரிக்கைக்கும் இலக்காகி இருந்தது. ''நல்ல தம்பி என்கிற கெட்ட தம்பி கடவுள் இல்லை என்று மறுப்பதாய் அமைந்த படம்'' என்பது அதன்மீது தொடுக்கப்பட்ட குற்றச்சாட்டுகளில் முக்கியமானது. அதைக் கல்கி மறுதலித்து, உண்மையிலேயே அவன் நல்ல தம்பிதான் என்று சொன்னார். பெற்றோர் இருவரையும், உலகம் போற்றும் உத்தமர்கள் மூவரையும் அவன் போற்றியதைச் சுட்டிக் காட்டி, ''அன்னை தந்தையரைக் கடவுள் என்று சொல்வதில் நமக்கு என்ன ஆட்சேபம் இருக்க முடியும்?'' என்று கேட்டார்.

''அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வம்'' என்பது தமிழ் நாட்டுப் பழமொழி. ''மாதுரு தேவோபவா! பிதுரு தேவோபவா!'' என்று உபநிஷதம் முறையிடுகிறது. எல்லா மதங்களிலும் எல்லா நாடுகளிலும் பெற்றோர்களைத் தெய்வம் என்று போற்றுவது வழக்கமாய் இருந்து வருகிறது...

புத்தர், ஏசு, மகாத்மா காந்தி மூவரும் மாநிலம் வாழ்வதற்காகத் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்தவர்கள். தீனர்களின் துயரம் தீர்ப்பதற்காகத் தாங்கள் எல்லையில்லா இன்னல்களை அனுபவித்தவர்கள். அவர்களைக் ''கடவுளர்கள்'' என்று சொல்வது சாலவும் பொருந்தும்.

ஒரு மனிதன் கோயிலுக்குப் போக வேண்டாம்; மற்ற வெளிப்படையான மதாசாரங்களை அனுஷ்டிக்க வேண்டாம். புத்தர், ஏசு, மகாத்மா இவர்களைப் போற்றி, இவர்கள் காட்டிய வழியில் தன் வாழ்க்கையை ஒருவன் நடத்தினான் என்றால் அவனே உண்மையான ஆஸ்திகன்.

(கல்கி இதழ் 5-6-49)



'கன்னனி' என்னும் பெயரில் நெல் பயிரிடப்பட்டிருந்தது. அதைப் பார்த்த ஒருவர் கேட்டார்: ''நண்பரே! மாதனி என்னும் பெயரில் ஏதேனும் நெல் வகை இருக்கிறதா?''

நண்பர்: இல்லையே! ஏன் கேட்கிறீர்கள்?

ஒருவர்: நல்ல வேளை! ''நெல்லில் சிறந்தது கன்னனியா? மாதனியா?'' என்று பட்டி மன்றம் நடத்த வழியில்லாமல் போய் விட்டது.

-- பி.யூ. நாராயணன்

இந்த விமர்சனத்தை அச்சமயம் கவர்னர் — ஜெனரலாய் இருந்த ராஜாஜி படித்துவிட்டு, ரசிகமணிக்கு எழுதிய கடிதம் ஒன்றில் தமது பாராட்டை வெளியிட்டார்:

(புதுடெல்லி 7-6-49)

கல்கி இந்த இதழில் 'கர்நாடகம்' என். எஸ். கிருஷ்ணனுடைய நல்ல தம்பி படத்தைப் பற்றி எழுதியிருக்கும் விமரிசனம் மிகவும் நன்றாயிருந்தது என்று கிருஷ்ணமூர்த்திக்குச் சொல்ல வேண்டும். ''நல்ல டெக்னிக்கை விரும்புகிறவர்கள் வேறு படங்களைப் பார்க்கப் போங்கள்; நல்ல லக்ஷியம் நல்ல நடிப்பு, நல்ல சிரிப்பு — இவற்றை விரும்புகிறவர்கள் நல்ல தம்பி படத்தைப் பாருங்கள்'' என்று வெகு அழகாக முடித்திருக்கிறது. இந்த நடை கிருஷ்ணமூர்த்திக்குப் பிறகு யார் எழுதப் போகிறார்கள்!

கழகக் கலைஞர்கள் சம்பந்தப்பட்ட திரைப்படங்களில் கடைசியாகக் கல்கி விமர்சனம் செய்தது ''மனோகரா''; அந்த விமரிசனம் அவர் வாழ்நாளில் வெளியான கடைசிப் புத்தாண்டு மலரில் இடம் பெற்றது. அந்தப் புத்தாண்டின் பெயர் ஜய வருஷம். ''மனோகராவின் வெற்றி'' என்பது அந்த விமரிசனத்தின் தலைப்பு.



## நாமக்கல்லில் ஹனுமத் ஜயந்தி

நாமக்கல் க்ஷேத்திரத்திலுள்ள ஆஞ்சநேயர் சன்னதியில் இருக்கும் கார்னேஷன் சத்திரத்தில் ஜயந்தி மஹோத்ஸவம் டிசம்பர் 23ந் தேதியிலிருந்து ஜனவரி 1ந் தேதி வரை நடக்க விருக்கிறது. இந்தத் தெய்விக நாளுகளில் ஆக்கரை ஸ்ரீ கல்யாணராம சாஸ்திரிகள் அவர்களது நவாஹ விதிப்படி மூல பாராயணம், பிரவசனம் நடைபெறும். இந்தப் புனித சத்சங்கத்தில் ஆஸ்திகப் பெருமக்கள் திரளாகக் கலந்துகொள்ள வேண்டும்.

---

ஒவ்வொரு அம்சத்திலும் எப்படி அந்தப் படம் வெற்றியாய் இருந்தது என்பதை, வெற்றிக்கு மேல் வெற்றியாக அடுக்கிச் சொல்லிப் புகழுரைகளைப் பொழிந்தார் கல்கி. அவற்றில் ஒன்று அதன் ''ஜீவசக்தியுள்ள'' வசனத்தின் வெற்றி:

இந்தத் திரைப்படத்தில் வரும் மனோகரன் இராஜ சபையில் நீண்டதொரு சொற்பொழிவு நிகழ்த்துகிறான். அதைச் 'சொற்பொழிவு' என்று சொன்னால் போதாது. ஏனெனில், சாதாரணப் பேச்சுக்களைக் கூட இந்தக் காலத்தில் 'சொற்பொழிவு' என்று குறிப்பிடுகிறோம்.

மனோகரன் இராஜ சபையில் பேசும் பேச்சைச் 'சொற்பிரவாகம்', 'சொல் வெள்ளம்', 'சொற் பிரளயம்', 'சொல் சண்டமாருதம்' என்றெல்லாம் சொன்னாலும் திருப்தி உண்டாகவில்லை. 'சொல் அம்பு மழை' 'சொல் குண்டு மழை', 'அணுகுண்டு சொல்மாரி', 'எரிமலைச் சொற்பொழிவு' என்றெல்லாம் சொல்லக் கூடிய விதமாக, மனோகரன் தீப்பொறி பறக்கும் காரசாரமான சொற்களைக் கொட்டித் தீர்க்கிறான்.

தமிழ் மொழியை எவ்வளவு வன்மையாய்க் கையாள முடியும் என்பதற்கு மனோகரனின் இராஜ சபைப் பேச்சு நல்ல எடுத்துக்காட்டு.

**(கல்கி இதழ் 11-4-54)**

இந்த வாக்கியங்களில் வசனத்துக்கான புகழ்ச்சி முழுதுக்கும் உரியவர் மு. கருணாநிதி. அவரே தான், பம்மல் சம்பந்த முதலியாரின் நாடகத்தைத் தக்கபடி மாற்றி அமைத்தும், உரையாடல்களைத் தமதாகவே வரைந்தும், மனோகரா திரைக் கதையை எழுதியவர்.

முன்பு கல்கி பாராட்டி விமரிசனம் எழுதியதும் — ஏற்கனவே முன்னொரு அத்தியாயத்தில் நாம் கவனித்ததுமான — சி. என். அண்ணாதுரையின் ''ஓரிரவு'' நாடகம், பின்னர் திரைப்படமாக வந்தது. அதைக் கல்கி பார்க்கவில்லையோ, பார்த்தும் விமரிசனம் வேண்டியதில்லை என நினைத்தாரோ தெரியவில்லை. அது எப்படியாயினும், முந்திய நாடக விமரிசனத்திலிருந்து, பகுத்தறிவுவாதிகளின் எழுத்துத் திறமை, பேச்சுத் திறமை பற்றிய பொதுவான பகுதி ஒன்றை இங்கே பார்ப்பது பொருத்தமாய் இருக்கும்:

....திருச்சி ''நகர தூதன்'' பத்திரிகையின் முதற் பக்கத்தில், ''பேனா நர்த்தனம்'' என்னும் தலைப்பில் ஒருவர் எழுதுகிறாரே, அவர் மிகப் பொல்லாத எழுத்தாளர். அவருடைய பேனா நர்த்தனத்தில், பரத நாட்டியத்திலேயுள்ள சகல ஜதி வகைகளையும் காணலாம். அப்படித் துள்ளிக் குதிக்கும் வேகமுள்ள தமிழ் நடையில் எதிர்க் கட்சிக்காரர்களையும் எதிர்க் கட்சிக் கொள்கைகளையும் அவர் தாக்குவார். நானும் பார்த்து வருகிறேன், சென்ற இருபது வருஷத்துக்கு மேலாக இவருடைய கொள்கையும் ஒரே மாதிரியாக இருந்து வருகிறது; இவருடைய தமிழ் நடையும் ஒரேவித வேகமுள்ளதாய் இருந்துவருகிறது. இவரால் தாக்கப்படுகிற மனிதர் நல்ல ரஸிகராக மட்டுமிருந்தால், ''தாக்கப்பட்டாலும் இப்படிப்பட்ட பேனா விரல் அல்லவா தாக்கப்பட வேண்டும்'' என்றுதான் எண்ணத் தோன்றும்.

(''பேனா நர்த்தனம்'' புரிந்தவரின் பெயர் மணவை திருமலைசாமி என்று தெரிகிறது.)

திராவிடக் கட்சி — சுயமரியாதைக் கட்சி— ஜஸ்டிஸ் கட்சிச் சொற்பொழிவாளர்களிலே தற்சமயம் தலைசிறந்து விளங்குகிறவர் திரு சி. என். அண்ணாதுரை அவர்கள் (திரு ஈ.வே. ராவுக்கு அடுத்தபடியாகத்தான் சொல்லுகிறேன். ஈ. வே. ராவைப் போன்ற வலிமை மிகுந்த மேடைப் பேச்சாளர் தமிழ் நாட்டில் வேறு யாருமே இல்லை என்பது என் அபிப்பிராயம். இல்லாமற் போனால், அவ்வளவு பலமற்ற ஒரு கட்சியை இத்தனை நாளும் விடாமல் தாங்கி நின்று, போகும் இடங்களிலெல்லாம் இன்னமும் ஜனக் கூட்டம் சேர்க்க முடியுமா?) திரு சி. என். அண்ணாதுரையின் சொற்பொழிவுகள் சிலவற்றை நான் கேட்டிருக்கிறேன். ''சொற்பொழிவு என்றால் இதுவல்லவா பொழிவு? தட்டுத் தடுமாறிச் சொற்களுக்காகத் திண்டாடி நிற்பதை யெல்லாம் சொற்பொழிவு என்கிறோமே!'' என்று எண்ணத் தோன்றும்.

**(கல்கி இதழ் 7-12-47)**

எந்தப் பொருளை யார் மூலம் கேட்டாலும் அதிலே மெய்ப் பொருளைக் காண்பான் அறிவாளி; அந்த அறிவாளி ரசிகனுமாகவும் இருந்தால், அந்த மெய்ப் பொருளிலே அழகையும் காண்பான்.

(தொடரும்)



**வம்பன்**

**ப**ம்பாய் டெலிபோன் இலாக்காவின் ஹிந்தி டைரக்டரியில் ஏராளமான பிழைகள் காணப்படுகின்றனவாம். சர்க்கார் காரியாலயத்தையொட்டியுள்ள பத்திரிகை நிருபர்கள் அறையை ஆங்கிலத்தில் ''பிரஸ் ரூம்'' என்று சொல்வது வழக்கம். அதை ''முத்ரணாலய கக்ஷ'' என்று மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கிறார்கள். இந்த ஹிந்தி வார்த்தைக்குப் பொருள் என்ன தெரியுமா? ''அச்சடிக்கும் அறை'' என்பதுதான்!

● ● ●

பம்பாயின் முக்கிய பகுதியான தாதரில், நடைபெற இருந்த ஒரு மராத்தி நாடகத்தில் நடிக்க வந்த ஒரு ஹாஸ்ய நடிகர் நல்ல குடி போதையில் இருந்தாராம். அவரால் மேடையில் நிற்கக்கூட முடியவில்லையாம்! சபையோர் கூச்சல் போடத் தொடங்கினர். நாடக நிர்வாகிகள், சபையோருக்கு, டிக்கெட் பணம் திருப்பித் தந்தனர். சிலர் தாங்கள் அந்நாடகம் பார்ப்பதற்கென்று டாக்ஸியில் வந்ததால் டாக்ஸிக்குச் செலவிட்ட பணத்தையும் கேட்டனராம்.

நல்ல காலம் யாரும் அந் நாடகத்துக்கு விமானத்தில் ஏறிச் சென்னையிலிருந்தோ டில்லியிலிருந்தோ போனதாகத்தெரியவில்லை!

● ● ●

இம்மாதத் தொடக்கத்தில் மகராஷ்டிர மாநிலத்தைச் சேர்ந்த கராட் என்னும் நகரில் அகில இந்திய மராத்தி எழுத்தாளர் மகாநாடு நடைபெற்றது. 10,000-க்கு மேற்பட்ட பிரதிநிதிகள் வந்திருந்தார்களாம். மத்திய மந்திரி திரு ஒய். பி. சவான் வரவேற்புக் கமிட்டித் தலைவர். மகாநாட்டுத் தலைவர் குமாரி துர்கா பகவத்.

இம் மகாநாட்டில் முக்கியமாகக் குறிப்பிடத் தக்க விஷயம், ''இன்றையச் சூழ்நிலையில் பேச்சுச் சுதந்திரம்'' என்பதைப் பற்றியே பலரும் பேசினார்கள் என்பது.

**பா**ட்னாவில் சமீபத்தில் நடைபெற்ற பாஸிஸ எதிர்ப்பு மகாநாட்டில் தி. மு. க. ஒரு பாஸிஸ்ட் கட்சியென்றும் நாட்டுப் பிரிவினையைத் தூண்டும் கட்சியென்றும், அங்கு கூடிய கமிஷன் தீர்மானித்திருக்கிறது.

தி. மு. க. தலைவர்கள் தாங்கள் பிரிவினைவாதக் கொள்கையைக் கைவிட்டு விட்டதாக எத்தனையோ மேடைகளில் சொல்லி யிருக்கின்றனர். இந்த அபிப்பிராயத்தில் பாரத நாட்டு மக்களுக்குப் பரிபூரண நம்பிக்கை ஏற்படுவதற்கு முன், மூலைக்கு மூலை மாநில சுயாட்சி கோரி மகாநாடுகள் நடத்தியதன் விளைவு இப்போது தெரிகிறதா?

● ● ●

இரண்டாவது உலக யுத்தம் நடந்தபோது, யுத்த நிலவரத்தில் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது. கராச்சியிலிருந்து வெளியாகும் ''டெய்லி கெஜட்'' என்ற பத்திரிகைக்கு எம். எஸ். எம். சர்மா ஆசிரியராக இருந்தார். அன்றைய ஆசிரியர் குழுக் கூட்டத்தில் சர்மா, தமது உதவி ஆசிரியர் திரு எஸ்.கே. ராவ் அவர்களை, ''நீ இந்தப் புதிய திருப்பத்தைப் பற்றி என்ன நினைக்கிறாய்?'' என்று கேட்டார். ராவ் ஒரு கருத்தை வெளியிட்டார். அந்தக் கருத்தை யொட்டியே, அன்றைய தலையங்கத்தை எழுதிவிடுமாறு பணித்தார் ஆசிரியர் சர்மா. அன்று மாலை வெளியே போயிருந்த சர்மா சில ராணுவ தளபதிகளைச் சந்தித்தபோது, அவர்கள் காலையில் ராவ் குறிப்பிட்டிருந்த கருத்துக்கு மாறுபட்ட அபிப்பிராயத்தைத் தெரிவித்திருக்கிறார்கள்.

இதன் விளைவு என்னவாயிற்று தெரியுமா? மறுநாள் காலை பத்திரிகையில் தலையங்கப்பகுதியில் ஒன்றுக்கொன்று முரண்பட்ட இரண்டு தலையங்கங்கள் வெளியாகி யிருந்தன. ஆம், சர்மா, காலை தமது உதவி ஆசிரியருக்குத் தலையங்கம் எழுதச் சொல்லிப் பணித்ததை முற்றும் மறந்து, இரவு தாமே ஒரு தலையங்கத்தை ராணுவத்தினர் சொன்ன கருத்துக்கேற்ப எழுதிக் கொடுத்திருக்கிறார்.

இப்படிப்பட்ட முரண்பட்ட தலையங்கங்களைப் படித்த வாசகர்கள் சும்மா இருப்பார்களா? தந்தியும், தபால்களும் டெலிபோன் 'கால்'களும் வந்து குவிந்தன!

எதற்கும் நிலைகுலையாத சர்மா என்ன செய்தார் தெரியுமா?

''டெய்லி கெஜட் நடுநிலைமை வகிக்கும் பத்திரிகை. அதனால் இரண்டு விதக் கருத்துக்களையும் வெளியிட்டிருக்கிறோம். வாசகர்கள் தமக்கு இஷ்டமான' கருத்தை ஏற்றுக் கொள்ளலாம்'' என்று பதில் எழுதிப் பிரசுரித்தார்!




## 13

இங்கு இவள், அங்கு அவன் !

ஆம், அநூப்பின் மன நிலையும் ஏறக்குறைய இதுவேதான். ரூபாவின் காதலில் அவன் பித்தனாகவே ஆகிவிட்டிருந்தான். அவனுடைய ஒவ்வொரு மூச்சுக் காற்றிலும் ரூபாவே இழையோடினாள். இன்னும் சொல்லப் போனால் ரூபாவே அவன் மூச்சானாள். சிறிது நேரம் கண்களை மூடினால் போதும் அவன் எதிரே ரூபா மனமோகன உருவம் தாங்கி வந்து நிற்பாள். மடல் மலராக அவன் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுவாள். அந்தக் கண்ணாமூச்சி, அந்தப் பனிப் புயல், பயணிகள் விடுதியின் மறக்க முடியாத அந்த இரவு... ஒவ்வொன்றாக அவன் உள்ளத்தைத் துடிக்க வைத்துத் தாளமிட வைக்கும்.

ரூபாவின் அழகைப் பற்றி அவன் புகழ்ந்து புகழ்ந்து மாய்வதைக் கேட்டு அவன் நண்பன் பிரபுவே அலுத்துப் போனான், நல்ல அறுவை என்று ! எனவே, எரிச்சலோடு, ''உன் காதலி இந்திர லோகத்து அரம்பையாகவே இருக்கட்டும், இங்கு யாரும் வேண்டாம் என்று கூறவில்லை. ஆனால், அவள் யார், அவளுடைய அப்பா — அம்மா யார், கூடப் பிறந்தவர்கள் எத்தனை பேர், குடும்ப நிலை எப்படி என்பதை யெல்லாம் முதலில் சொல்லு ! வாழ்க்கைத் துணையைத் தேடிக் கொள்வதற்கு முன்பு இதையெல்லாம் ஆராய்ந்து நீ யோசித்துப் பார்த்திருப்பாயே !'' என்றான்.

''எனக்கு ஒன்றே ஒன்றுதான் தெரியும், பிரபு! அவள் என்னை உயிராக நேசிக்கிறாள். நாங்கள் இருவரும் ஒருவரைப் பிரிந்து ஒருவர் வாழ முடியாது. அவ்வளவுதான் எனக்குச் சொல்லத் தெரியும் !''

# இன்பத் தென்றல்

குல்ஷன் நந்தா

தமிழாக்கம்: ரா. வீழிநாதன்

இந்தப் பதிலைக் கேட்ட பிரபு உதட்டைப் பிதுக்கினான். 'காதல் பித்தம் கலந்துவிட்டது' என்பதாக எண்ணிக் கொண்டு தன் அறைக்குச் சென்று விட்டான்.

**மா**தா கோயிலில் முழங்கிய மணி அந்தச் சூழலையே தூய்மையாக்கி ஒலித்தது.

ஏசுநாதரின் சிலைக்கெதிரே பல மெழுகு வத்திகள் அசையாது எரிந்து ஒளிவட்டம் கூட்டின. மாதா கோயிலில் கூடியிருந்த அத்தனை பக்தர்களும் சிரம் தாழ்த்தி உண்மைப் பொருளைத் தேடுவதில் நாட்டமாயிருந்தனர்.

வழிபாட்டுத் தூய்மைக்கு வளங்காட்டிய அக்கோயிலிலே ஒரு மூலையில் நின்று கொண்டு ரூபாவும் மனத்துள் தன் பாபங்களுக்குப் பிராயச்சித்தம் வேண்டிக் கொண்டிருந்தாள். கூட்டத்திலிருந்து விலகி நின்று அவள் ஏசுபெருமானின் புனிதச் சிலையைப் பார்த்தாலும், அடிக்கடி ஓரக் கண்ணால் ஸிஸ்டர் தெரஸாவையும் பார்த்துக் கொண்டாள். தெரெஸா சற்றுத் தொலைவில் வழிபடுவோரின் வரிசையில் நின்று பிரார்த்தனை செய்து கொண்டிருந்தாள். குற்றமுள்ள நெஞ்சம் குறுகுறுக்கும் என்பதை நினைவுபடுத்துகிறுந் போல், ரூபாவுக்கு ஸிஸ்டர் தெரெஸாவின் கண்களில் இரண்டொரு முறை ஐயப்பாடு ஒளிவிட்டு மறைவதாகத் தோன்றியது.

எனவே, வழிபாடு முடிந்ததும் ரூபா, ஸிஸ்டர் தெரெஸாவின் கண்களில் படாமல் வெளியேறி ஹாஸ்டலை நோக்கி நடந்தாள். அவள் விடுதி வராந்தாவைத் தாண்டும் பொழுது, எதிர்த்தாற்போல் நிஷி வரவே தயங்கி நின்றாள். இதற்குள் மற்றப் பெண்களும் மாதா கோயிலிலிருந்து திரும்பி வந்து விட்டார்கள்.

ரூபாவுக்கு நிஷியுடன் பேச்சுக் கொடுப்பது சரியாகப் படவில்லை. அவளால் தன் மனக் கவலையையும் பதறுறத்தையும் மறைக்க முடியும் போல் தோன்றவில்லை. எனவே, எவ்வளவு முடியுமோ, அவ்வளவு விரைவில் தனிமையை நாடிச் செல்ல விரும்பினாள். எனவே, அவள் நிஷியைக் கவனித்தும் கவனிக்காதவள் போல் நடந்தாள். அவளது இந்தச் செய்கை நிஷிக்கு வியப்பைத் தந்தது. அந்த வியப்பை விழிகளில் தேக்கி, அவள் போவதையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

உள்ளம் புகுந்த கள்ளத்தை மறைப்பதற்காக ரூபா தினம் போல் ஸிஸ்டர் தெரெஸாவின் அலுவலகத்தைத் துப்புரவு செய்யத் தொடங்கினாள். துடைத்த இடத்தையே துடைத்துக் கொண்டு, நின்ற இடத்திலேயே நின்று கொண்டு அவள் வேலை செய்த லட்சணமே அவள் மனம் எப்படிப் பதறிப் பரிதவிக்கிறது என்பதைக் காட்டிக் கொடுத்தது. அதோடு வியர்த்து வேறு கொட்டியது.

போதாக் குறைக்கு ஸிஸ்டர் தெரெஸா அங்கே வரவே, அவளுக்குச் சப்தநாடியும் ஒடுங்கினாற் போன்ற உணர்வு. மெதுவான குரலில் 'குட்மார்னிங்' சொல்லிவிட்டுக் கூஜா நீரை மாற்றும் சாக்கில் அவள் வெளியே செல்லலானாள்.

ஸிஸ்டர் தெரஸா அவள் உள்ளத்தையே துளைத்து விடுகிறாற்போலப் பார்த்தாள். பிறகு அறையைச் சுற்றிப் பார்வையை ஓட்டினாள். திடீரென்று தனது சுழல் நாற்காலியை வேகமாகச் சுழலவிட்டாள். அதே வேகத்தில் ஜன்னல் அருகில் போய் நின்றாள். வெளியே தோட்டத்துக் குழாயில் ரூபா கூஜாவில் நீர் நிரப்பிக் கொண்டிருந்தாள். கூஜா நிறைந்த பின்னரும் நீர் வழிந்து கொண்டிருந்தது. அதில் ரூபாவின் கவனம் செல்லவே யில்லை. ஸிஸ்டர் தெரஸாவுக்குச் சிரிப்பு வந்தது. உதடுகள் நெளிய அவள் தன் நாற்காலியில் போய் அமர்ந்து கொண்டாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் ரூபா கூஜாவுடன் உள்ளே நுழைந்தாள். ஸிஸ்டர் தெரெஸாவைப் பார்க்கத் தெம்பில்லாமலே, வாடிய மலர்களை எடுத்துக் கொண்டு வெளியே போனாள். தன்னை எதிர்கொள்ள அவள் அஞ்சுகிறாள் என்பதை ஸிஸ்டர் தெரெஸா புரிந்து கொண்டாள்.

''என்னோடு பேசமாட்டாயா ?'' என்று வெளியே போனவளை வலிய நிறுத்திக் கேட்டாள் ஸிஸ்டர் தெரெஸா.

ரூபா துணுக்குற்று நின்றாள். நல்ல வேளை, பூச்சாடிக்கு உயிர் கெட்டியாக இருந்தது. அவளது பதற்றத்தில் கீழே விழுந்து உடையாமல் பிழைத்தது. அவளுக்கு ஏற்பட்ட பயத்தில் உள்ளத் துடிப்பு அவளுக்கே கேட்கும் அளவுக்கு ஓங்கி ஒலித்தது.

ரூபா பேசாமல் நின்றாள். அவளுக்கு வியர்த்துக் கொட்டியது. மூளை மரத்து விட்டது. பார்வை பூமியில் பதிந்தது.

'' நேற்று நீ உன் அம்மாவைப் பார்க்கப் போகவில்லையா ?''

''இல்லை !'' வெகு சிரமப்பட்டுச் சொன்னாள் அவள்.

''எங்கே போயிருந்தாய் ?''

''குப்ரிக்கு!''

''எதற்காக ?''.

'' சுற்றிப் பார்க்க.''

''ஏன் திரும்பவில்லை ?''

''புயல் வந்துவிட்டது.''.

'' உன்னோடு யார் வந்தது ?''

# நண்டு



நண்டுப் பொந்திலுள் கையை விட்ட மாத்திரத்திலேயே இது ஆண் நண்டு கட்டியதா அல்லது பெண் நண்டு கட்டியதா என்று இலகுவில் சொல்லி விடலாம். பெண் நண்டானால் பொந்தின் உட்சுவர் எளிதில் நம் கையால் பெயர்த்தெடுக்கும் புளவில் மிருதுவான களிமண்ணைக் கொண்டதாகவும், வளைவுகள் இல்லாமல் நேராகவும் இருக்கும்.

ஆண் நண்டின் குழி வளைந்து செல்லும். குழியின் உட்புறச் சுவரின் ஓரமெல்லாம் கூர்மையான, சிறிய கற்கள் பதிந்திருக்கும். கற்களின் கூர்மையான பாகம் நம் கைவிரலைக் கிழித்துவிடும். கூட்டின் கடைசிப் பகுதியை நம் கை விரல்கள் உணர்ந்தாலும் அங்கு நண்டைக் காணாமல் திகைப்படைய நேரலாம். காரணம் ஏதாவது ஓரிடத்தில் பக்கவாட்டில் மற்றொரு பொந்து உண்டாக்கப்பட்டிருக்கும். இப்பொந்தின் வழியாக நண்டு தப்பிச் சென்றுவிடும்!

நண்டின் உடல்மீது நம் விரல் பட்டுவிட்டாலோ அடுத்த கணம் "நண்டுப் பிடி" என்ன என்பது நமக்கு விளங்கும். வலி பொறுக்க முடியாமல் நாம் விரலை உதறி எடுக்கும்போது சில சமயங்களில் நம் கை விரல்களில் உள்ள சதைப் பகுதி பிய்க்கப்பட்டுவிடும்.

கோடை காலம் ஆரம்பித்ததும் நண்டு மேலும் பொந்தின் ஆழத்தை அவ்வப்போது அதிகரித்து, தான் வாழும் இடம் ஈரப் பசையுடன் இருக்க ஏற்பாடு செய்து கொள்ளும். ஈரத் தன்மைக்காகச் சில சமயம் சுமார் நாலு அடி வரை கூட குழி தோண்டியிருக்கும்.

கோடைகாலத்தில் நண்டுகள் இல்லாத நண்டுப் பொந்தில் தண்ணீர்ப் பாம்புகள் புகுந்து இருப்பிடமாக மாற்றிக் கொள்கின்றன. பெரும்பாலும் பெண் நண்டின் குழியையே பாம்புகள் தேர்ந்தெடுக்கின்றன. காரணம் ஆண் நண்டின் குழியில் உள்ள கூர்மையான கற்கள் பாம்பின் உடலைக் கிழித்துக் காயப்படுத்திவிடும் என்பதுதான்.

- அந்தோனி பேசில்



"அநூப்!" ரூபா சங்கோசத்தோடு தலை குனிந்தபடி கூறினாள்..

"நீங்கள் இரவு முழுதும் எங்கே இருந்தீர்கள்?" ஸிஸ்டர் தெரெஸா குரலில் கடுமை ஒலிக்கக் கேட்டாள்.

"பயணிகள் விடுதியில்!"

"ஓ, மை காட்!" ஸிஸ்டர் தெரெஸாவுக்கு ஒரு கணம் உள்ளத் துடிப்பே நின்று விட்டாற் போலிருந்தது.

எப்பொழுதும் தனிமையையே நாடிக் கொண்டிருந்த ஒரு பெண் இப்படித் துணிச்சலாக ஒரு காரியம் செய்வாள் என்று எண்ணிப் பார்க்கக் கூட அவள் மனம் துணியவில்லை. தன்னைச் சுதாரித்துக் கொண்டு, "இந்த அநூப் யார்? அன்றைக்குத் தன் சகோதரியின் புகைப்படம் வேண்டி வந்திருந்தானே, அவன் தானே?" என்று கேட்டாள்.

ரூபா தலை அசைத்தாள். ஸிஸ்டர் தெரெஸா அவளை ஒரு முறை மேலிருந்து கீழ் வரையில் நோக்கினாள். பிறகு வருத்தம் தோய்ந்த குரலில், "ரூபா! நீ எத்தனை பெரும் பாவம் செய்துவிட்டாய், தெரியுமா?" என்றாள்.

ரூபா ஒரு கணத்துக்குத் தன் பார்வையை நிமிர்த்தினாள். பிறகு அடக்கமான குரலில், "காதலிப்பது பாவமா?" என்று கேட்டாள். கேட்டபின் அவளுக்கே வியப்பாகி விட்டது. வார்டனுக்கு எதிரே இவ்வளவு பேசத் தனக்கு எங்கிருந்து துணிச்சல் பிறந்தது என்று!

"பாவம் இல்லை; புண்ணியம்! அவன் ஒழுக்கத்தில் உயர்ந்தவன், பாரு!" தெரெஸாவின் குரலில் ஏளனம் தெறித்தது.

"ஸிஸ்டர்.....!" ரூபா தன் வேகத்தை எப்படித்தான் அடக்கிக் கொண்டாளோ?

"சொல்லு, சொல்லு! ஏன் நிறுத்திவிட்டாய்?" ஆத்திரத்தை அள்ளி வீசினாள் ஸிஸ்டர் தெரெஸா.

ரூபா மீண்டும் ஒரு முறை பார்வையை உயர்த்தினாள்; ஸிஸ்டர் தெரெஸாவை நேருக்கு நேர் பார்த்தாள். அவள் சொல்லில் தொனித்த ஏளனம் ஈட்டியெனக் குத்தியது. சுடச் சுடப் பதிலடி கொடுக்கலாமா, வேண்டாமா என்று ஒரு கணம் யோசித்தாள்.

அதற்குள் ஸிஸ்டர் தெரெஸா முந்திக் கொண்டு விட்டாள். "உன் அறிவு மழுங்கி விட்டது என்று தோன்றுகிறது. உன் உயர் நோக்கங்களுக்கு நீ இப்படி இழுக்குத் தேடிக் கொள்வாய் என்று நான் கனவிலும் நினைத்ததில்லை!" என்றாள்.

"அன்பின் வழி அது உயிர் நிலை என்ற உயர்ந்த கருத்தை எனக்குப் போதித்தவரே நீங்கள்தான், ஸிஸ்டர்!"

"ஆனால் நீ கொண்டிருப்பது தூய அன்பு அல்ல; தீய ஆசை. சமயம் பார்த்து உன்னை மோசம் போகச் செய்துவிடும். இது மகா பாவம்."

"அப்படியானால் அதற்குத் தண்டனை இருக்குமே!"

"ஆம், அதற்குப் பெரும் தண்டனை உண்டு. அது உன் வாழ்வையே பாழாக்கிவிடும். ஒரு சிறு தவறு உன்னைக் கல்லூரியிலிருந்து வெளியேற்றிவிடும், தெரியும் அல்லவா?"

"என்னை மட்டும்தானா? அல்லது கல்லூரியில் உள்ள மற்ற மாணவிகளையுமா?"

"ரூபா!" — ஸிஸ்டர் தெரெஸா உரக்கவே கூவி விட்டாள்: "நீ இப்படி வெட்கம் கெட்டுப் போவாய் என்று நான் நினைத்ததே இல்லை!"

"ஐ ஆம் ஸாரி ஸிஸ்டர்!"

"நீ அறியாதவள், புரியாதவள். இன்னும் குழந்தைதான். காதல் என்பது ஒரு மோசக்கார வலை. இதைப் புரிந்து கொள்ளுகிற வயது உனக்கு இன்னும் வரவில்லை. ஆண்டவனையே ஏமாற்றக் கூடிய ஒரு பையன் உன்னை ஏமாற்ற மாட்டான் என்பது என்ன

# சத்துமிகுந்த, சுவையான
# பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்




## வளரும் குழந்தைகளுக்கு
## சுவையான துணை



பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள் அருமையான தனிச் சுவையோடு மேம்பட்டு விளங்குவது ஏன்? சத்துச் செறிந்த ஆரோக்கியமான குணச்சிறப்பே காரணம். ஆசையோடு குழந்தைகள் அவற்றை விரும்பிச் சுவைத்து வளருகின்றனர்! பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்— வளரும் குழந்தைகளுக்குச் சுவையான துணை.

நிச்சயம் ? அவன் உனக்குத் துணையாக நிற்பான் என்பதை நான் எப்படி நம்ப முடியும்?''

''நீங்கள் சொல்வது விளங்கவில்லை, ஸிஸ்டர் !'' ரூபா நடுங்கிப் போய்த் தலையைத் தூக்கினாள்.

ஸிஸ்டர் தெரெஸா மேஜையிலிருந்து அநூப்பின் செக்கை எடுத்து அவள் எதிரே வைத்து, ''இது செல்லுபடியாகாமல் திரும்பி வந்திருக்கிறது!'' என்றாள்.

ரூபா செக்கை எடுத்துக் கவனமாகப் பார்த்தாள். ''அநூப் அப்படியெல்லாம் செய்யக் கூடியவர் அல்ல !'' என்றாள் நம்பிக்கையோடு.

''உளறாதே. என் எதிரிலேயே இதற்கான அத்தாட்சி இருக்கிறது. ஒருநாள் நீயும் இதே செக்கைப் போல் 'டிஸ் ஆனர்' ஆகலாம். உன் முகத்திலே கரியைப் பூசிவிட்டு அவன் போய்விடுவான். அப்புறம் சமூகம் என்னும் பாங்கில் உனக்கு ஒரு மதிப்பும் இராது. சமூகத்தில் நீ மதிப்பிழந்து மானமிழந்து நிற்க வேண்டியதுதான். சமூகம் உன்னை ஏற்றிப் போற்றாது; தூற்றிப் பேசும் !''

''ஸிஸ்டர் !'' ரூபாவின் உதடுகள் துடித்தனவே ஒழிய அவளுக்குப் பேச்சு எழவில்லை. சொல்ல வந்த சொற்கள் எல்லாம் தொண்டைக்குள்ளேயே சிக்கிக் கொண்டன. நரம்புகள் புடைக்க, பார்வை வெறிச்சோட அவள் ஸிஸ்டர் தெரெஸாவைப் பார்த்தாள். அடுத்த கணம், அவள் விழிகள் அருவியாகக் கண்ணீரைச் சொரிந்தன.

''இன்னும் ஒன்றும் குடி கெட்டுப் போகவில்லை. நீ அந்தக் கயவனை மறந்துவிடு !'' ஸிஸ்டர் தெரஸா அன்பு இழைவோடக் கூறினாள்.

''முடியாது, ஸிஸ்டர் ! ரூபாவினால் அது முடியாது !'' வேற்றுக் குரல் அவர்கள் இருவரையும் துணுக்குற வைத்தது.

இருவரும் சேர்ந்தாற் போல் நிமிர்ந்து பார்த்தனர். அறை வாசலில் அநூப் நின்று கொண்டிருந்தான்.

அவனைக் கண்டு ரூபா அச்சமுற்றாள். ஸிஸ்டர் தெரெஸா வெறுப்பும் கோபமும் கொந்தளிக்க அவனைப் பார்த்தாள். அவன் மெதுவாக நடந்து மேஜை வரையில் வந்தான். சிறிது நேரம் மூவருமே பேசாமல் இருந்தனர். யாருக்குமே என்ன பேசுவது என்று விளங்கவில்லை.

''நீங்கள் இந்தச் செக்கின் காரணமாகக் கோபித்துக் கொண்டிருக்கிறீர்கள் என்று எண்ணுகிறேன் !'' என்று கூறியவாறே அநூப் மேஜை மீதிருந்த செக்கைத் தன் கையில் எடுத்துக் கொண்டான்.

'' இந்தக் காசோலை உங்கள் நடத்தைக்கு ஒரு சாட்சி !'' என்றாள் ஸிஸ்டர் தெரெஸா.

''சாட்சியாக இருக்கலாம். ஆனால் அதுவே தீர்ப்பாக முடியாது !''.

'' தீர்ப்பின் லட்சணந்தான் நன்றாகத் தெரிகிறதே ! இந்தச் செக்கைக் கழுத்தில் கட்டித் தொங்கவிட்டுக் கொண்டு வலம் வாருங்கள். சாட்சியா, தீர்ப்பா என்பது நாலு பேருக்குத் தெரியட்டும் !'' ஸிஸ்டர் தெரெஸா காறி உமிழாத குறைதான்.

'' தேவையில்லை, ஸிஸ்டர் ! நான் என் நடத்தையிலே மாசு படிய விட மாட்டேன்!'' என்ற அநூப் தன் கோட்டின் பைக்குள் கைவிட்டு நோட்டுக் கட்டுக்களை எடுத்து மேஜையின் மீது விட்டெறிந்தான்.

''மிஸ்டர் அநூப்....'' ஸிஸ்டர் தெரஸா ஏதோ சொல்ல நினைத்தாள்.

'' எண்ணிப் பார்த்துக் கொள்ளுங்கள், வள்ளிசாக ஐயாயிரம் இருக்கிறதா இல்லையா என்று !'' என்றான் அநூப்.

''பார்த்தீர்களா, ஸிஸ்டர் ! பாங்கில் தான் ஏதோ குழப்பம் நடந்திருக்கிறது !'' தன் கட்சிக்கு வலு கிடைக்கவே ரூபா தைரியமாகக் கூறினாள்.

'' ஆமாம், கையெழுத்துக் கோளாறு காரணமாகத்தான் செக் திரும்பி வந்திருக்கிறது. அதற்கு நான் எப்படிப் பொறுப்பாக முடியும் ? என் கையெழுத்தையே மாற்றிய குற்றம் உங்கள் பேனாவைச் சேர்ந்தது !'' என்றான் அநூப்.

'' எதுவானாலும் நாங்கள் இந்தப் பணத்தை ஏற்பதற்கு இல்லை.''

''ஏன் ?'' அநூப் திகைத்துப் போய்க் கேட்டான்.

''இந்தப் பணத்தைக் கொடுத்து ஓர் அறியாப் பெண்ணின் மனத்தைக் கலைத்து அவளை உங்கள் செல்வச் செருக்குக்கு அடி பணிய வைக்கப் பார்க்கிறீர்கள். இத்தகைய காணிக்கை ஆண்டவனுக்கு ஏற்காது. இதை ஒரு நல்ல காரியத்துக்குச் செலவிடுவதும் தவறு!'' என்றாள் ஸிஸ்டர் தெரெஸா.

(தொடரும்)



அடுத்த இதழில்...

சென்னையில் இலங்கை

(கிரிக்கெட் வர்ணனை)

சூடாக ஒன்பது ஜோக்ஸ்

(தராஜா)

போட்டிக்கதை:

மனைவியின் கண்ணீர்...



## தஞ்சாவூர்
## பர்மனெண்ட் பாங்க்

வழங்கும்

# முத்து விழா ஆண்டு
# பரிசுப்பத்திர திட்டம்

நீங்கள் முதலீடு செய்வது
ரூ 25/- மட்டுமே
இந்த முதலீட்டை 10 ஆண்டுகளுக்கு
பிறகு ரூ 50/- ஆக திரும்பப் பெறலாம்
இது தவிர
ஒவ்வொரு மாதமும் ரூ.33,000/- வரை
120 மாதங்களுக்கு டெபாசிட்
செய்யும் சந்தாதாரர்களுக்கு
பரிசுகள் வழங்குகிறோம்
உங்கள் முதலீட்டை போல் 400 மடங்கு
பரிசுகள் பெற 120 அரும் பெரும் வாய்புகள்



---

**1-11-75 முதல் 15-4-76 வரை**

டெபாசிட் வட்டியுடன் திரும்ப பெறும் தேதி 15-4-1986

உங்கள்
முதலீடு
**ரூ 25/-**
**மட்டும்**

மாதா மாதம் வழங்கப்படும் பரிசுகள்

| | |
|---|---|
| முதல் பரிசு. | ரூ 10,000 |
| 2ம் பரிசு. | ரூ 5,000 |
| 3ம் பரிசு. | ரூ 3,000 |
| 4ம் பரிசு. | ரூ 100/- வீதம் 50 பரிசுகள் |
| 5ம் பரிசு. | ரூ 50/- வீதம் 200 பரிசுகள் |

முதல் குலுக்கல் : ஏப்ரல் '76.




எளியோரின் முன்னேற்றத்திற்கான பயனுள்ள திட்டம்
முதலீடு ரூ 25/- பரிசுகளோ பல பல
முதலீடு செய்திடுவீர்-வென்றிடுவீர் பரிசுகளை

---

பூரண விவரங்களுக்கு எங்கள் கிளை முதல்வரை அணுகுங்கள்.

# தஞ்சாவூர் பர்மனெண்ட் பாங்க் லிட்,

பதிவு அலுவலகம் ● தஞ்சாவூர் 613001

R. சொக்கப்பா — காரியதரிசி. B. K. மாதவன் — சேர்மன்

சக்தி-311

# வைர நெஞ்சம்



✲ படத்தில் சில காட்சிகளுக்குப் பிறகே வந்தாலும் சிவாஜியின் வருகையே திடுக்கிடத்தான் வைக்கிறது.

ஸ்ரீதர் படங்களில் சற்றுப் புதுமையானது; சிவாஜி நடித்த படங்களிலும் புதுமையானது தான் — ஜேம்ஸ் பாண்ட் பாணி மர்மம், கொலை, கொள்ளை, திடுக்கிடும் சம்பவங்கள், அடி, உதை, குத்து இவைகளுக்கு இடையில் காதல் மணமும் வீசுகிறது. கதையை நன்றாகவே தயாரித்திருக்கிறார் ஸ்ரீதர். வசனத்தையும் சுருக்கமாகப் புனைந்திருக்கிறார்; டைரக்ஷனையும் 'இது ஸ்ரீதர் படம்' என்று பாராட்டிச் சொல்லும்படி செய்திருக்கிறார். படத்தின் முதல் காட்சியை, துப்பறியும் மர்மக் கதைக்கு ஏற்ற விதத்தில் திடுக்கிடும் வண்ணம் தொடங்கியிருப்பது நல்ல உத்தி. காட்சிக்குக் காட்சி 'மேலே என்ன' என்று கேட்க வைத்திருக்கிறார் டைரக்டர் ஸ்ரீதர்.

நடிகர் திலகம் மிடுக்காகவும், துடுக்காகவும் சில இடங்களில் இடக்காகவும் நடித்துத் தம் பாத்திரத்தை நிலைநாட்டுகிறார். சண்டைக் காட்சிகளிலும் சக்கைப் போடு போட்டிருக்கிறார். கண்ணீர் வடிக்கவே வாய்ப்பில்லை. அது சிவாஜி ரசிகர்களுக்கு மன நிறைவைத் தராது. அவரது தனி முத்திரையைப் பதிக்கவும் வாய்ப்பில்லை. அது சரி, இப்படத்தில் அவர் எடை கூடுதலாகத் தெரிகிறதே! உடனே கவனம் செலுத்த வேண்டும்.

பத்மப்ரியா நடித்த பல படங்கள் வெளி வந்துவிட்டன என்றாலும், இதுதான் ஒப்பந்தமான அவருடைய முதல் படம். டைரக்டர் ஸ்ரீதர் தேர்ந்தெடுத்த புதுக் கதாநாயகியான பத்மப்ரியா, அலங்காரப் பதுமையாக வந்து பலவிதமான உடைகளில் தோன்றி ஜிலுஜிலு என்று ரசிகர்களின் கண்ணுக்கு விருந்தளிக்கிறார்; உழைத்து நடிக்க வேண்டிய அவசியம் அவருக்கு எங்குமே இல்லை.

முத்துராமனின் அருமைத் தங்கையாக வரும் பத்மப் பிரியாதான் பாங்கியில் நடந்த துணிகரமான கொள்ளையை நேரில் பார்த்த ஒரே சாட்சி. அதை வைத்துக்கொண்டு திரைக் கதையை வளர்த்திருந்தால் சற்றுப் புதுமையாயிருந்திருக்கும். துப்பறியும் அதிகாரியாக வரும் சிவாஜிக்கு ஒரு காதலி வேண்டுமே என்பதற்காகப் பத்மப்பிரியாவைச் சேர்த்திருக்கிறார்கள் என்று தோன்றுகிறது!

மர்மமாகக் கொலை செய்யப்பட்ட தந்தையின் மரணம், தந்தை வேலை பார்த்த அதே பாங்கியில் மிகவும் பெரிய பதவி, பாங்கியின் மர்மக் கொள்ளை, இப்படியெல்லாம் வந்து முத்துராமன் ஏற்ற பாத்திரத்தைக் குழப்புகின்றன. ஆனால் முத்துராமன் மிகவும் நன்றாக, பாத்திரத்தை உணர்ந்து நடித்திருக்கிறார். மனத்தில் பதிகிற நடிப்பு.

பாலாஜியும் ஏ. சகுந்தலாவும் வில்லன் — வில்லியாக வந்து படத்தின் திடுக்கிடும் சம்பவங்களுக்கு உறுதுணையாயிருக்கின்றனர்.

சித்ராலயாவின் வண்ணப் படமான ''வைர நெஞ்சம்'' டால் அடிக்கிறது. ஆனால் அசல் வைரமாகச் சொல்ல முடியாது.

— காந்தன்

---

## ஏன்?

உலகிலேயே அமெரிக்க தேசிய கீதம் The Star-Spangled Banner ஒன்றுதான் ஒரு கேள்வியில் ஆரம்பித்து ஒரு கேள்வியில் முடிகிறது.

— எம். சிவசுப்ரமணியன்



# ஐயோ பாம்பு!

மதன்

**அரசாங்க அலுவலகம் ஒன்றில் பாம்புகள் எங்கு பார்த்தாலும் வந்து குடியேறி விட்டன ! — செய்தி**

தலைமைக் கணக்காளர்,
கணக்கு இலாகா

இப்போதெல்லாம் உங்கள் இலாகா ஊழியர்கள் அடிக்கடி மட்டம் போடுகிறார்கள் என்பது என் கவனத்துக்குக் கொண்டு வரப் பட்டுள்ளது. தினமும் சராசரி மூன்று பேர் லீவ் எடுத்த வண்ணம் இருக்கிறார்கள்.

இதற்கான காரணங்களை ஆராய்ந்து உடனடியாக எமக்குப் பதில் எழுதும்படி பணிக்கிறோம்.

இப்படிக்கு,
நித்தியகண்டம்
மானேஜிங் டைரக்டர்

மானேஜிங் டைரக்டர் அவர்களுக்கு,

விஷயம்: ஊழியர் மட்டம்

மேற்படி விஷயம் குறித்த தங்கள் குறிப்பு கிடைக்கப் பெற்றோம். உடனடியாகப் பதிலெழுத முடியவில்லை. காரணம்: நான் கடந்த நான்கு நாட்களாக லீவில் இருந்ததுதான்.

எமது இலாகா ஊழியர்கள் அடிக்கடி லீவ் எடுப்பது உண்மைதான். ஆனால் இது முழுக்க முழுக்க அவர்கள் குற்றமல்ல. நமது கட்டடத்தைச் சுற்றித் தாழம்புதர்களும், செடி கொடிகளும் மண்டிக் கிடப்பதால்தான் அவர்கள் இம்மாதிரி லீவ் போடும்படி நேரிடுகிறது.

விளக்கமாகச்சொல்கிறோம்: எங்கள் இலாகாவில் பாம்பு நடமாட்டம் அதிகமாக உள்ளது. பீரோக்களிலும், பைல் கட்டுகளுக்கு இடையிலும், மேஜை டிராயர்களிலும் — ஏன், தண்ணீர்ப் பானையில் கூட — பாம்புகள் வந்து இடம் பிடித்துக் கொண்டு விடுகின்றன. 'பாம்பென்றால் படையே நடுங்கும்' என்ற பால பாடம் தங்களுக்குத் தெரியாததல்ல. படையின் கதியே இப்படி என்றால் தொடை நடுங்கிகளான எமது இலாகா ஊழியர்கள் நடுங்குவதற்குக் கேட்பானேன்?

மேற்படி விளக்கம் தங்களுக்குத் திருப்தி அளிக்கும் என்று நம்புகிறேன்.

இப்படிக்கு,
திருவேங்கடம்
தலைமைக் கணக்காளர்

தலைமைக் கணக்காளர்
கணக்கு இலாகா

உங்கள் இலாகா ஊழியர்கள் லீவ் எடுப்பதற்கான விளக்கம் கிடைக்கப்பெற்றோம்.

பாம்பென்றால் பயப்பட வேண்டியதுதான். ஒப்புக்கொள்கிறோம். ஆனால் எத்தனை நாளைக்குத்தான் இப்படி லீவ் போட்டபடி இருக்க முடியும்?

எனவே, உடனடியாகப் பாம்புகளை விரட்டுவதற்கான முயற்சிகளை மேற்கொள்ளுமாறு பணிக்கிறோம். உங்கள் முயற்சிகளின் பலாபலன்கள் குறித்து அவ்வப்போது எமக்குத் தகவல் கொடுக்கும்படி கோருகிறோம்.

இப்படிக்கு
நித்தியகண்டம்
மானேஜிங் டைரக்டர்

தலைமைக் கணக்காளர்,
கணக்கு இலாகா

சென்ற வாரத்திய சில்லறைச் செலவுகள் விவரம் எம் பார்வைக்கு வந்தது.

அதில் 'பாம்புக் கணக்கு' என்ற தலைப்பில் ரூ. 360க்குச் செலவு காட்டப்பட்டிருக்கிறது. பாம்புகள் உங்கள் இலாகாவை விட்டு வெளியேற அவற்றுக்கு லஞ்சம் கொடுத்த தொகையா இது? அல்லது வேறெந்த வகையில் இந்தச் செலவு செய்யப்பட்டுள்ளது என்று உடனடியாக எமக்குத் தெரிவிக்கக் கோருகிறோம்.

இப்படிக்கு
நித்தியகண்டம்
மானேஜிங் டைரக்டர்

மானேஜிங் டைரக்டர் அவர்களுக்கு,

விஷயம்: பாம்புக் கணக்கு

1. அந்தத் தொகை லஞ்சம் கொடுக்கப் பட்ட தொகை அல்ல.

2. பாம்புகளைப் பிடிக்க ஒரு பாம்பு பிடி நிபுணரை — அதாவது பாம்புப் பிடாரனை— அமர்த்தியதற்கான செலவுதான் அது. மேல் விவரமாவது:

| | | |
|---|---|---|
| மோடிமஸ்தான் காதர்பாட்சாவை தேடிப் பிடிக்க டாக்ஸி செலவு | ரூ. | 54 |
| மேற்படியாருக்குக் கூடை வாங்கக் கொடுக்கப்பட்ட தொகை | ரூ. | 18 |
| மேற்படியாருக்குச் சன்மானம் | ரூ. | 190 |
| மேற்படியார் செலவினங்கள்: (வார்னிஷ், பாம்புகளுக்கு முட்டை மசால்தோசை, பக்கோடா, காப்பி) | ரூ. | 98 |
| மொத்தம் | ரூ. | 360 |

இந்த விவரங்கள் உங்களுக்குத் திருப்தி யளிக்குமென நம்புகிறோம்.

இப்படிக்கு,
திருவேங்கடம்
தலைமைக் கணக்காளர்

தலைமைக் கணக்காளர்,
கணக்கு இலாகா

பாம்புக் கணக்கு

மேற்படி கணக்கில் புரிபடாத அம்சங்கள் என்னவென்றால்—

(1) வார்னிஷ்

(2) மசால் தோசை, பக்கோடா முதலியன

பாம்புகளுக்கு எதற்காக வார்னிஷ்? தோல்களுக்குப் பாலிஷ் போட்டுக் கொள்ளவா?

எந்த வகைப் பாம்புகள் மசால்தோசை, பக்கோடா சாப்பிடும் என்றும் அறிய விரும்புகிறோம். உடனடியாகப் பதில் அளிக்கவும்.

இப்படிக்கு,
நித்தியகண்டம்
மானேஜிங் டைரக்டர்

மானேஜிங் டைரக்டர் அவர்களுக்கு,

தங்களது குறிப்புக்குப் பதில் இதோ:

(1) வார்னிஷ் போட்டால்தான் பாம்புகளைப் பிடித்துக் கூடைக்குள்ளே போடும் திராணியும், தெம்பும், மனோதிடமும் தமக்கு வரும் என்று பாம்பு பிடி நிபுணர் மோடி மஸ்தான் கூறியதன் பேரில் அவர் மட்டும் சாப்பிடுவதற்கென்றே வார்னிஷ் — கறுப்பு மார்க்கெட்டில் — வாங்கப்பட்டது என்பதை அறியவும்.

(2) மசால் தோசையும் மற்றவையும் பாம்பு பிடிக்கும் படலத்தின்போது உடனிருந்து வேடிக்கை பார்த்த — ஒத்துழைத்த — எமது இலாகா ஊழியர்களுக்காகவே வரவழைக்கப்பட்டன என்பதையும் அறியவும்.

இப்படிக்கு,
திருவேங்கடம்
தலைமைக் கணக்காளர்

தலைமைக் கணக்காளர்,
கணக்கு இலாகா

பாம்புக் கணக்கில் சென்ற வாரம் செலவிடப்பட்ட தொகை ரூ. 360. இந்த வாரம் ரூ. 430. பாம்பு விஷம் ஏறுவதை விட மளமளவென்று இந்தச் செலவினம் ஏறுகிறது என்பதை உங்களது கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

மோடி மஸ்தான் இதுவரை எத்தனை பாம்புகள் பிடித்திருக்கிறார் என்பதை உடனடியாகத் தெரியப்படுத்தவும்.

இப்படிக்கு,
நித்தியகண்டம்
மானேஜிங் டைரக்டர்

மானேஜிங் டைரக்டர் அவர்களுக்கு,

மஸ்தான் இதுவரை பிடித்துள்ள பாம்புகளின் எண்ணிக்கை மூணே கால் இருக்கும்!

இப்படிக்கு,
திருவேங்கடம்
தலைமைக் கணக்காளர்

தலைமைக் கணக்காளர்,
கணக்கு இலாகா

அநியாயம்! அக்கிரமம்! மூணே கால் பாம்பைப் பிடிக்கவா இதுவரை (இந்த வாரமும் சேர்த்து) ரூ. 1260 செலவு பண்ணியிருக்கிறோம்!

மேலும் அது என்ன கணக்கு — மூணே கால்? கால் பாம்புகூட உண்டா என்ன? பாம்புக்குத்தான் காலே கிடையாதே!

உடனே பதில் தேவை.

இப்படிக்கு,
நித்தியகண்டம்
மானேஜிங் டைரக்டர்

மானேஜிங் டைரக்டர் அவர்களுக்கு,

பிடிபட்ட பாம்புகளின் எண்ணிக்கையைத் தெரிவிப்பதில் தவறு நேர்ந்துவிட்டமைக்கு வருந்துகிறோம்.

'3 அல்லது 4 பாம்புகள் இருக்கும்' என்பதை 3/4 என்று எழுதிக் கொடுக்கப் போக, அவசரத்தில் அதை 3 1/4 என்று எமது டைப்பிஸ்ட் தவறுதலாக அடித்து விட்டார்.

பாம்புகளைப் பிடிப்பது நமது தார்மீகக் கடமையாகும். எனவே, இதில் செலவைப் பொருட்படுத்தக்கூடாது என்று மட்டும் கூற விரும்புகிறோம்.

பாம்புகள் பிடிபட்டால் ஊழியர்களின் பயம் பறந்தோடும்; அவர்கள் லீவ் எடுப்பது குறையும். அலுவலக வேலைகள் மளமளவென்று முடியும். இதைத் தாங்கள் ஒப்புக் கொள்வீர்கள் என்று நம்புகிறோம்.

இப்படிக்கு,
திருவேங்கடம்
தலைமைக் கணக்காளர்

தலைமைக் கணக்காளர்,
கணக்கு இலாகா

பாம்பு பிடி திட்டத்தின் கீழ் வாராவாரம் செலவுகள் அதிகரித்துக் கொண்டே போகின்றன. எனவே—

1. மோடி மஸ்தானை மாதாந்தரச் சம்பளத்துக்கு அமர்த்தினால் என்ன?

அல்லது

2. கீரிப்பிள்ளை ஒன்று வாங்கி வளர்த்தால் என்ன?

இப்படிக்கு,
நித்தியகண்டம்
மானேஜிங் டைரக்டர்



மானேஜிங் டைரக்டர் அவர்களுக்கு.

1. மோடி மஸ்தான் மாதச் சம்பளத்துக்கு வேலை பார்க்கத் தயாராக இல்லையாம். கோடம்பாக்கத்தில் அவர் தமது மகுடி, பாம்பு சகிதம் மாயா ஜால – மந்திர ஜாலப் படப் பிடிப்புக்களில் கலந்துகொள்ளவேண்டி விருப்பதே காரணம்.

2. நல்ல ரிப்பினை கிடைக்க வேண்டுமானால் காஷ்மீருக்குத்தான் போக வேண்டும் என்கிறார் மோடி மஸ்தான். காஷ்மீர் போய் வர (பிளேன் கட்டணம் உள்பட) ரூ. 3600 செலவாகும். போகலாமா?

தங்களது உத்தரவுகளை எதிர்பார்க்கிறோம்.

இப்படிக்கு,
திருவேங்கடம்
தலைமைக் கணக்காளர்

தலைமைக் கணக்காளர்,
கணக்கு இலாகா

பாம்பு விவகாரம்

நமது ஆபீஸ் கட்டடத்தைச் சுற்றியுள்ள புதர் – செடி – கொடிகளைப் பூண்டோடு அழிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதன்படி கன்னியப்பன் என்ற நபர் தம்முடைய ஆட்கள் சகிதம் நாளை வருவார். அவருக்குக் கூலியாக ரூ. 54 கொடுக்கும்படி உத்தரவிடுகிறோம்.

நாளை மறுநாள் முதல் உங்கள் இலாகாவில் பாம்புத் தொல்லையே இராது என்று உறுதி கூறுகிறோம்.

இப்படிக்கு,
நித்தியகண்டம்
மானேஜிங் டைரக்டர்

தலைமைக் கணக்காளர்,

கணக்கு இலாகா

நேற்று உங்கள் இலாகாவில் ஆறு பேர் மட்டம் அடித்துள்ளனர். பாம்புகளைத்தான் செடி கொடிகளை அழிக்கும்போது அடித்துக் கொன்றாகி விட்டதே? அப்படி இருந்தும் உங்கள் இலாகா ஊழியர்கள் மட்டம் போடுவானேன்?

உடனடி விளக்கம் தேவை.

இப்படிக்கு,
நித்தியகண்டம்
மானேஜிங் டைரக்டர்

மானேஜிங் டைரக்டர் அவர்களுக்கு,

எமது இலாகா ஊழியர்கள் மட்டம் போடக் காரணம்: வயிற்று வலி.

பாம்பு பிடி நடவடிக்கைகளின்போது தினசரி தொடர்ந்து மசாலா தோசையும், பக்கோடாவும் சாப்பிட்டதின் நேரடி விளைவே இந்த வயிற்று வலி என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

இப்படிக்கு,
திருவேங்கடம்
தலைமைக் கணக்காளர்

# விநோதச் சட்டங்கள்!



அமெரிக்காவிலுள்ள பல விநோத சட்டங்களில் சில பின்வருமாறு:

■ மின்னிசோட்டாவில் ஆண்கள் அணியும் உள் நிஜாரையும், பெண்கள் அணியும் உள் நிஜாரையும் ஒரே கொடியில் தொங்கவிடக் கூடாது.

■ இந்தியானாவைச் சேர்ந்த கேரி என்னும் நகரில் பூண்டு சாப்பிட்ட நான்கு மணி நேரத்துக்குள் டிராம் வண்டியில் பயணம் செய்யக் கூடாது.

■ கலிபோர்னியாவில், எலிப் பொறி கொண்டு எலியைப் பிடிக்க, வேட்டை லைசென்ஸ் வைத்திருக்க வேண்டும்.

■ இல்லினாய்ஸைச் சேர்ந்த ஜாலியட் என்னும் நகரில் ஒரு பெண், ஒரே துணிக் கடையில், ஆறுக்கு மேற்பட்ட ஆடைகளை அணிந்து பார்த்தால் சிறைக்கு அனுப்பப்படுவாள்.

■ அரிஸோனாவைச் சேர்ந்த மொஹேவ் என்னும் நகரில், எவனாவது சோப்புக் கட்டியைத் திருடினால், அந்தச் சோப்புக் கட்டி கரையும் வரை, அவன் அதைத் தேய்த்துக் குளிக்க வேண்டும்.

■ அயோவாவில் தியேட்டருக்கும் படையினர், தீ அணைக்கச் செல்லும் முன், பதினைந்து நிமிட நேரம் ஒத்திகை பார்க்க வேண்டும்!

■ கென்டக்கியில் நீச்சல் உடை அணிந்துள்ள எந்தப் பெண்ணும், கையில் ஒரு குண்டாந்தடி இல்லாமல் இருக்கக் கூடாது.

■ இந்தியானாவைச் சேர்ந்த கேரி நகரில், வில்லும் அம்பும் கொண்டு மீன் பிடிக்கக் கூடாது.

ஆதாரம்: Scrapings என்ற நூல்
உதவி: நாடோடி

# புதிய அனுபவம், பேரானந்தம்



ADROIT/92

**செஞ்சுரி**

**பருத்தித் துணிகள்**



**செஞ்சுரி** -100% பருத்தித் துணிகள்

தி செஞ்சுரி ஸ்பின். அண்டு மான்யு. கம். லிமிடெட், பம்பாய்-400 025

# மண்ணில் தோன்றிய விண்ணவர்



வேலூரின் நகர் விரிவில் ஒரு மண்டபம் கட்டக் கடைகால் தோண்டும் போது கிடைத்த நடராஜர் (மண்ணில் புதைந்திருந்த கோலத்தில்)

நவம்பர் மாதம் முதல் வாரத்தில் வேலூர் நகர் விரிவில் உள்ள ஓடைப் பிள்ளையார் கோவிலின் அருகில் உள்ள சிவன் கோவிலில் ஒரு மண்டபம் கட்டக் கடைகால் எடுத்தார்கள். கொத்தனாருக்கு அதிசயம் காத்திருந்தது. நிதானமடைந்த கொத்தனார் அவசரப்படாது ஆழமாகத் தோண்டிப் பார்த்தார். முதலில் பஞ்ச உலோகத்தால் ஆன ஆனை முகத்தானும் அடுத்து அவருடைய உடன் பிறப்பு மயில் வாகனரும் கிடைத்தார்கள்.

இதற்குள் செய்தி பரவியது. ஆலய நிர்வாகிகள் விரைந்தனர். அவர்கள் எல்லோருக்கும் ஆசி வழங்கியவாறு ஆனந்தமூர்த்தியான கூத்தனார் மிகப் பெரிய உருவத்தில் வெளி வந்தார். நடராஜரைத் தொடர்ந்து மற்றும் சில தேவர்கள், வலம்புரி சங்கைவிட உயர்ந்தவகையான வெண்சங்கு, ஆலய மணி ஆகியவை ஒவ்வொன்றாக வெளிவந்து கொண்டே இருந்தன.

இந்த ஆலயத்தைப் பற்றி வழி வழியாக வழங்கும் கதை ஒன்று உண்டு. இந்தச் சிவன் கோயிலில் ஓர் அர்ச்சகர் தினம் அதிகாலையில் பூசை செய்து சிவபெருமானின் நெற்றியில் சிறிய சந்தனப் பொட்டு வைத்துச் செல்வார். மறுநாள் பூஜைக்கு வரும்போது அந்தச் சந்தனப் பொட்டு அதே அளவில் தங்கப் பொட்டாகக் கிடைக்கும். இதை வைத்துக் கொண்டுதான் அர்ச்சகர் ஜீவனம் நடத்தி வந்ததுடன் ஆலயச் செலவையும் கவனித்து வந்தாராம்.

ஒரு நாள் அவரது மகன் தந்தை நோயாக இருந்ததால் வழிபாட்டுக்குச் சென்றார். ஆசை யாரை விட்டது? சிவனாரின் நெற்றியில் பெரிதாகச் சந்தனப் பொட்டு வைத்தார். அதிகப் பொன் கிடைத்தால் வறுமை ஒழியுமல்லவா?

ஆயினும் மறுநாள் அவனுக்கு வித்தை காத்திருந்தது. எனது வழிபாட்டில் ஆசைக்கு இடம் இல்லை என்பதை உணர்த்தினார். சந்தனப் பொட்டு பொன்னாக மாறவில்லை. அன்று மாத்திரம் அல்ல; அன்று முதல் என்றுமே சந்தனப் பொட்டு மாறவேயில்லை.

இப்போது கிடைத்துள்ள இந்தச் சிலைகள் எத்தனை நூற்றாண்டு காலம் மண்ணில் புதைந்திருந்தன என்று கணக்கிட முடியாது. புதை பொருள் இலாகா நிபுணர் திரு நாகசாமியின் கருத்துப்படி இந்தச் சிலைகள் ராஜ ராஜ சோழன் காலத்துக்கு முற்பட்டவை. உயர்ந்த ரக சங்கை நன்கொடையாக வழங்கியவரின் பெயரும் கிரந்த எழுத்தில் காணப்படுகிறது.

இந்தச் சிலைகள் எந்தக் கோயிலினுடையவை? வேலூர் கோட்டையில் உள்ள ஜல கண்டேசுவரர் ஆலயத்தினுடையதா? அப்படியானால் ஜுல்பிகர் கான் தென்னாட்டில் படையெடுத்து வந்தபோது ஆலயம் அழிக்கப்பட்டதாகத் தெரிகிறது. அது சமயம் இந்தச் சிலைகளை மண்ணில் மறைத்து வைத்தவர் கொல்லப்பட்டதால் இந்தச் சிலைகள் பற்றிய விவரமே கிடைக்காது போய்விட்டிருக்கலாம்.

மண்ணில் பல நூற்றாண்டுகள் புதைந்திருந்து தவம் செய்து தேஜோமயமாக வெளி வந்துள்ள நடராஜர் பக்தர்களுக்கு அனுக்கிரகம் செய்ய — அருளை அள்ளித் தர — காத்திருக்கிறார்.

— டி. எஸ். ராஜூ சர்மா

புகைப்படங்கள்: ஹாரிசன்



பெறற்கரிய புதையலாகக் கிடைத்த சிலைகள். உயர் ரக சங்கும் காணலாம்.

ஜேகே — டிவி முன்னோடிகள் இப்போது உங்களுக்கு வழங்கும் ஏழு கவர்ச்சியான டிவிகள் சிறப்பானவை. எல்லாம் புரட்சிகரமான புதிய 'ஹை-கெயின் கிவூட் ரோடைன் ஸிஸ்டம்' கொண்டவை. டிவி படத்தை தடைகளற்றுக் காண உதவும் ஸிஸ்டம் இது.

ஜேகே டிவி உங்களுக்கு இப்போது ஒரு புதிய பெரும் உல்லாச உலகுக்கு வழி திறக்கிறது — ஏழு பிரமாதமான டிவிகள் — அமைப்பிலும் விலையிலும் உங்கள் ஆதரவைப் பெறத் தக்கவை. ஆம். நீங்கள் பலகாலமாக ஆவலுடன்

# வருக வருக, என்றென்றும் இன்பம் பெற ஏற்ற துணையைத் தேர்ந்தெடுக்க!

(ஏழு மாடல்களில் கிடைக்கிறது)



**அங்கீகாரம்பெற்ற ஜேகே டிவி டீலர்கள்:** டெலிவிஷன் ஹவுஸ் (வெங்கடேஸ்வரா ஏஜன்ஸியின் ஒரு யூனிட்) 92, வெங்கடேஸ்வரர் கோயில் தெரு, புரசைவாக்கம், சென்னை-600 007. போன்: 665891. காஸ்மஸ் எலக்ட்ரானிக்ஸ், 61-B, உஸ்மான் ரோடு, தி. நகர், சென்னை-600 017 போன்: 442165 (சப் டீலர்கள்: காஸ்மஸ் எலக்டிரிகல்ஸ், 40, லஸ் சர்ச் ரோடு, மைலாப்பூர்.



சாம்ராட்: மல்டி-சானல், இந்தியாவில் 65 செமீ திரை கொண்ட ஒரே சிறப்பு டிவி



டியூக்: மல்டி-சானல், இரண்டு இணைந்த ஒலிபெருக்கிகள் 48 செமீ—51 செமீ திரை



ஜம்போ ஜூனியர்: மல்டி-சானல் கதவுகளுடன். 48 செமீ—51 செமீ திரை



ஏஞ்ஜல் மல்டி-சானல், ஸாலிட் ஸ்டேட் பெட்டகம் போன்றது. எங்கும் எடுத்துச் செல்ல ஏற்றது. 31 செமீ. திரை.



அட்மிரல்: மல்டி-சானல். தள்ளு கதவுடன் 48 செமீ.—51 செ.மீ திரை



ஜம்போ ஜூனியர்: மல்டி-சானல் 48 செமீ—51 செமீ திரை



பிரின்ஸ்: மல்டி-சானல். 48 செமீ—51 செமீ திரை




தேடிவந்த இன்பமூட்டும் இத் துணையை இவற்றுள்ளே காணலாம் என்று நாங்கள் நம்புகிறோம்.

மேலும் ஜேகே டிவி பலவகையிலும் நாடத் தக்கது இந்தியாவின் முதல் டிவி இது; இன்று நாடெங்கும் மிக அதிகம் நாடப்படும் ஜேகே டிவி நீண்ட அனுபவத்தில் செம்மையாக்கப்பட்டுள்ளது. தொழில் நுட்பம், அமைப்பு-வடிவம், செயலாற்றல் ஆகியவற்றில் கவனத்துடன் தயாரானது. ஜேகேயின் தனிப்பட்ட 'ஹை-கெய்ன் நியூட்ரோடைன் ஸிஸ்டம்' மற்றும் அதற்கு இணைந்த 'யாகி அன்தென்னா' வும் சேர்ந்து சாதாரண டிவி செட்டுகளில் நேரும் தடைகளை அறவே நீக்குகின்றன — படச்சிதைவு, அலை அசைவு, மங்குதல், நிழல் தட்டுதல் போன்றவை இதில் நேராது. உங்களுக்குத் தெரிவதோ, தெள்ளத் தெளிவான, தடையற்ற டிவி படங்கள் — அற்புதமான ஒலி நாதத்துடன்.

நாங்கள் சொல்வதென்ன? நீங்களே பாருங்களேன். கவர்ச்சியான ஜேகே மாடல்கள் இயங்குவதை நேரில் பாருங்கள். எங்கள் வாக்கை உணருங்கள்.

"டிவி வாங்க உங்களுக்குப் பத்து நிமிடத் துணை" என்ற எங்கள் இலவச வெளியீடான ஆங்கிலச் சிறுநூலை உங்கள் ஜேகே விற்பனையாளரிடம் கேட்டுப் பெறுங்கள்.

அல்லது எங்களுக்கு எழுதுங்கள். எந்தப் பத்திரிகையில் இந்த விளம்பரத்தைப் பார்க்கிறீர்களோ அதன் பெயரையும் எழுதுங்கள்.

இந்தியாவில் டிவி அலைபரப்பு இருக்கும் இடம் எங்கும் ஜேகே டிவி விற்பனையாகின்றன.



**ஜேகே எலெக்ட்ரானிக்ஸ்.**
2/29 மவுண்ட் ரோடு,
சென்னை 600 002
டெலிபோன்: 86852
தந்தி: JEKEVISION

சென்னை, செங்கல்பட்டு, காஞ்சிபுரம், அரக்கோணம், ரேணிகுண்டா மதுராந்தகம், திருத்தணி ஆகிய இடங்களில் நம்பகமான விற்பனையாளர்கள் விற்பனை விஷயமாகத் தொடர்பு கொள்ளவும்.

SAA/JK/1899

சென்னை-600 004). ராஜா ரேடியோ & எலக்டிரிகல்ஸ், 176, ராயப்பேட்டை ஹைரோடு (லாயிட்ஸ் ரோடு சந்திப்பு) சென்னை-600 014, போன்: 83505. இன்டர்நேஷனல் டிரேடர்ஸ், 183, பிராட்வே, சென்னை - 600 001, போன்: 22592 (சப் டீலர்கள்: பாங்கர்ஸ் மியூஸிகல் & ஜெனரல், 76, ராயப்பேட்டை ஹைரோடு (லஸ் கார்னர் அருகில்) சென்னை-600 004, போன்: 72581. ஜேம்பி ஹோம்ஸ், 12, முதல் மெயின் ரோடு, காந்தி நகர், சென்னை-600 020, போன்: 413850.

இது ஜோக்ஸ் புக் அல்ல; புக் ஜோக்ஸ்!


































Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

உனக்கு ட்ரு பிடிக்குமா?

யாருக்குதான் பிடிக்காது?

ட்ரு மாரி, எந்நேரமும் சுவைக்கச் சிறந்த பிஸ்கட்.

தேநீர், காபி அல்லது எந்த பானத்துடனும் சுவைத்திட மொறுமொறுப்பான பிஸ்கட். உங்கள் குடும்பத்தினருடன் பகிர்ந்து மகிழ சிறப்பான சுவை.

இந்தியாவில் நவீனமான தொழிலகத்தில் சுகாதார முறைப்படி தரமாக தயாரிக்கப்படுபவை.

ட்ரு பிஸ்கட்டுகள் மொறுமொறுப்பானவை. புதுமணம் குன்றாமல் ருசி மிக்கவை.




# TRUE

# ட்ரு

## -பகிர்ந்திட விரும்பும் தரமிகுசுவை



HT-AFP-8021 ஆரோபுட் பிரைவேட் லிமிடெட், ஆரோவில் -- பாண்டிச்சேரி

